Registered No. M. 1500.

"NAVASAKTI"

# நவசக்தி

சந்தா விவரம்

| | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 3 | 0 |
| வெளிநாடு-வருடசந்தா | 6 | 0 |

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

விளம்பர விகிதம்

பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா 7 0
சில்லரை விளம்பரம் 1 அங். 0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்படமாட்டாது.

சிலம்பு ௧ — விபவஹூ பங்குனிமீ ௧௪வ (27—3—29) புதன்கிழமை — பரல் ௨௩



## சுந்தரமூர்த்தி

தம்மையே புகழ்ந்திச்சை பேசினுஞ்
சார்விலுந் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மையாளரைப் பாடாதே யெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மையே தருஞ்சோறுங் கூறையு
மேத்தலா மிடர் கெடலுமாம்
அம்மையே சிவலோக மாள்வதற்கி
யாதுமை யுறவில்லையே.

மிடுக்கிலாதானை வீமனே விறல்விசயனே
வில்லுக் கிவனென்று
கொடுக்கிலாதானைப் பாரியே யென்று
கூறினுங் கொடுப்பா ரிலைப்
பொடிக்கொள் மேனி யெம்புண்ணியன்
புகலூரைப் பாடுமின் புலவீர்காள்
அடுக்குமேல மருலக மாள்வதற்கி
யாதுமை யுறவில்லையே.

நரைகள்போந்து மெய்தளர்ந்து மூத்துடல்
நடுங்கி நிற்கு மிக்கிழவனை
வரைகள்போல் திரடோளனே யென்று
வாழ்த்தினுங் கொடுப்பா ரிலைப்
புரை வெள்ளேறுடைப் புண்ணியன்
புகலூரைப் பாடுமின் புலவீர்காள்
அரையனுய மருலகமாள் வதற்கி
யாதுமை யுறவில்லையே.

எட்டாம்பதிப்பு! வெளியாய் விட்டது!

## சரீர மர்ம சாஸ்திரம்

இந்த அருமையான நூலில் ஸ்திரீ, புருஷர் அனுபவிக்க வேண்டிய சம்சார சுகங்கள், குடும்ப ரஹஸியம், மணவாழ்க்கையின் மர்மங்கள் ஆகிய அனைத்தும் ததும்பிக் கிடக்கின்றன. 64 படங்களுடன் 200 பக்கங்கள் கொண்ட பெரிய புஸ்தகம் 1-க்கு விலை ரூபா 1.

எல்லாப் புஸ்தக வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

மாணிக்க விலாசம் பிரஸ்,
அருணசல முதலி வீதி, சென்னை.

---

## இனம்! இனம்!! இனம்!!!
## ஸில்க் அங்கவஸ்திரம்!

முந்துங்கள்! முந்துங்கள்!
இன்றே எழுதுங்கள்!
தாமதித்தால் உங்களுக்குத்தான் நஷ்டம்

விவரம் வேண்டுவோர் தபால்கூலிக்காக் 1 அணா ஸ்டாம்பு அனுப்பவேண்டும்.

மானேஜர், எம். ஆர். வீவிங் பாக்டரி,
12, கோட்டார், திருவாங்கூர்.

---

## பதினெட்டாம் பாஷை.

இந்த நூதன பாஷையை 15 நிமிஷங்களில் கற்றுக்கொண்டு பேசவும், எழுதவும் ஆரம்பித்துவிடலாம். இந்த பாஷையில் வியாபார ரகசியங்களைக் குறித்துக்கொண்டால் இப்பாஷை தெரிந்தவர்கள் தவிர வேறு எவரும் கண்டுகொள்ள முடியாது. ஸ்திரீகள் தங்கள் கணவர்களுடன் குடும்ப ரகசியத்தைப் பேசினால் பக்கத்திலுள்ளவர்கள் ஒற்றுக்கேட்டு பிறரிடம் சொல்லி கோள்மூட்ட முடியாது. இது ஓர் அபூர்வதமிழ் பரிபாஷை. சொற்ப காபிகளே கைவிருப்பிலிருக்கிறது. முந்துங்கள்.

விலை அணா 8.

அமிர்த குணபோதினி ஆபீஸ்,
302, தங்கசாலை வீதி, மதராஸ்.

---

## DINNERS

of all kinds are undertaken at short notice. Apply sharp to :

N. S. RAMULU,
10, Iswardosslala Street, Triplicane.

---

## மாதிரி பிரதி இனம்
(ஜோதிட ரகசியம்)

"மாருதி" என்ற மாதப் பத்திரிகையில் சோதிட சாஸ்திர ரகஸியங்கள் எல்லாம் வெளி வருகிறது. இது சமயம் "ஆயுர்தாய தர்ப்பணம்" என்ற அருமையான கிரந்தம் வெளிவந்துக் கொண்டிருக்கின்றது உள்நாடு வருஷ சந்தா ரூபா 3. வெளிநாடு ரூ. 3-4-0. மாதிரிபிரதிக்கு இன்றே எழுதுங்கள்.

விலாசம்:— மாருதி காரியாலயம்,
திருத்தணி, இந்தியா.

---

## இனம்
வைத்தியவித்தியா

## யௌவனம்

என்னும் பொக்கிஷத்தையும் ஆரோக்கிய மென்னும் குன்றாத செல்வத்தையும் விரும்பும் ஒவ்வொரு ஸ்திரீயும் புருஷனும் இப்புத்தகத்தை வாசித்து சுகமடையலாம்.

ராஜவைத்திய நாராயணஜீ கேசவஜீ,
1/94, சைனாபஜார், மதராஸ்

---

## ப்ரம்ஹ ஸூத்திர சாங்கர பாஷ்யம்
(தமிழ் மொழிபெயர்ப்பு)
(பாஷ்யம் மூலம் தேவநாகரலிபியில்)

"ஆரியமத ஸம்வர்த்தனி" என்ற மாதாந்தத் தமிழ்ச் சஞ்சிகையில் (13-6-1928) முதல் சாங்கரபாஷ்யத் தமிழ் மொழிபெயர்ப்பும் ஜாதகத்வாதசபாவபல நிர்ணயம் என்ற புஸ்தகத்தின் மொழிபெயர்ப்பும் சேர்த்து பிரதி மாதமும் வெளியிடப்படுகின்றது.

உள்நாட்டுக்கு வருஷ சந்தா ரூ. 6 0 0. வெளிநாட்டுக்கு ரூ. 8 0 0.

குறிப்பு:—ஸூத்திர பாஷ்யத்தைமட்டும் வாங்க விருப்பமுள்ளவர்கள் மொத்தமாக 24-0-0 ரூபாய் முன்பணமாக அனுப்பினால், இதுவரை அச்சிட்ட பாகங்களை அனுப்புவதுடன் அவ்வப்பொழுது அச்சாகும் பாரங்களையும் பிரதி மாதமும் அனுப்பி வருவோம். இரண்டு தடவையாகவும் பணம் அனுப்பலாம். ஆனால் தடவை ஒன்றுக்கு 13-0-0 அனுப்ப வேண்டும்.

ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் எழுதுவதாவது:—

"அறிஞர் சாஸ்திரியாரின் பாதஞ்ஜல ஸூத்திரத் தமிழ் மொழிபெயர்ப்பால் நலனடைந்து வரும் தமிழ்நாடு இம்மொழிபெயர்ப்பையும் பெரு வேட்கையோடு ஏற்றுப் போற்று மென்பதிலையமில்லை. அறிவும் அன்பும் ஒன்றிய ஓரிடத்திருந்து இம்மொழி பெயர்ப்பு வெள்ளம் பெருகுகிறது. அதைப் பருகவேண்டியது தமிழ்மக்கள் கடமை."

சொற்பக் காப்பிகளே அச்சிடுவதால் முந்துவது நலம்.

கடலங்குடி நடேச சாஸ்திரியார்,
72, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை.

---

வெளிவந்துவிட்டது! 10-ம் பதிப்பு வெளிவந்துவிட்டது!!

## ஆங்கில ஆசான்

(எமது லேடி டிரேட் மார்க்கைப் பார்த்து வாங்குங்கள். போலி புத்தகங்களால் ஏமாறவேண்டாம்.)

60-நாளையில் இங்கிலீஷ் கற்றுக்கொள்ளக்கூடியவிதமாய் அப்பியாச பாடங்களாகவகுத்து முன்பதிப்புகளைவிட அதிகபக்கங்கள் சேர்த்துப் பெரிய எழுத்துக்களில் அச்சிட்டிருக்கிறது. இதுவரையில் 53100 புத்தகங்கள் செலவாயிருப்பதாலேயே இதன் மேன்மை விளங்கும். இப்பத்தாம் பதிப்பு ஆங்கில ஆசான் புத்தகங்களைவிட வேறு எந்தபுத்தகங்களிலிருந்தும் அவ்வளவுசீக்கிரத்தில் இங்கிலீஷ் கற்றுக்கொள்ள முடியாதென்பது பலரும் அறிந்த விஷயம். நமது முன்பதிப்பு புத்தகங்களை வைத்திருப்பவர்கள்கூட 10-ம் பதிப்பைப் பார்த்தால் இதிலும் ஒன்று கட்டாயம் வாங்க வேண்டுமென்று எண்ணுவார்கள். இதில் 1-அணா முதல் 3000-ரூபா வரையில் சம்பளம் வாடகை கணக்கும் அச்சிட்டிருக்கிறது. 800-பக்கங்களுக்கு மேல்கொண்ட அழகிய சீமை கலிகோ பைண்டு செய்தது. விலை. ரூ. 2.

தி. இராஜகோபால் முதலியார்,
302, தங்கசாலை வீதி, மதராஸ்.

---

## முருகவேள் பனுவல் திரட்டு
[இரண்டாம் பதிப்பு]

சுப்பிரமணிய பக்தர்கள் பாராயணஞ் செய்தற்குரிய சிறந்த நூல்

இதில், திருப்புகழ், திருவகுப்பு, கந்தாலங்காரம், கந்தானுபூதி, கந்தாந்தாதி, கந்தர் கலிவெண்பா, கந்தர்சஷ்டி கவசம், திருமுருகாற்றுப்படை, முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ், திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ், திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ், திருப்போரூர் சந்நிதி முறை, திருத்தணிகை சந்நிதிமுறை, கந்த புராணம், தணிகைப் புராணம், திருச்செந்தூர்ப் புராணம் முதலிய நூல்கள் அடங்கி யிருக்கின்றன. இப்பதிப்பில் பல பாக்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. உயர்ந்த காகிதம். அழகிய பயிண்டு. விலை ரூபா 1-0-0.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

---

பொடியிற் சிறந்தது ராஜன் பட்டணம் பொடி

## ஆர். எஸ். சுகந்த மூக்குத்தூள்

விலை விவரங்களுக்கும் மற்றும் எங்களிடம் தயாராகும் தினுசுகளுக்கும் எழுதவும்.

தந்தி விலாசம்:— "நஸ்யம்."

பி. வி. ராஜன் & கம்பெனி,
நெ. 44, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, ந. மதராஸ்.

---

## ஒற்றுமை

ஒற்றுமையினால் எக்காரியத்தையும் சாதித்துவிட முடியுமாகையால் தேகத்திற்கு ஏற்படும் வியாதிகளை எங்கள்,

ஆதங்க நிக்ரஹ மாத்ரை

களாலும், இன்னுமிதர ஔஷதங்களாலும் நிவர்த்தி செய்துகொண்டு தேகத்திற்கும் மனதிற்கும் ஒற்றுமையை உண்டாக்கி, காரியங்களைச் சித்திபெறச்செய்யுங்கள். டப்பி 1-க்கு விலை ரூ. 1. கேட்போருக்கு இனமாகவும் தபாற் செலவில்லாமலும் எங்கள் ஆரோக்கிய கிரந்தத்தை அனுப்பப்படும்.

ஆதங்க நிக்ரஹ ஔஷதாலயம்,
26, பிராட்வே, மதராஸ்.

---

## கைத்தொழில் வணிக இரகசியம்

இதில் சோப்புகள், மெழுகுவத்தி, நெருப்புக்குச்சி, பெப்பர்மெண்ட், பிஸ்கத்து, கேக்குகள், வாசனை எண்ணெய்கள், அத்தர்கள், சாம்பிராணி வத்திகள், பன்னீர், சர்பத்துகள், இங்கி, பூட்ப லீஷ், வார்னிஷ், சாயங்கள், பலவித மருந்துகள், காகிதம், பென்சல் முதலியவைகள் செய்யும் முறைகளுடன் 200-பக்கங்கள் கொண்ட பெரிய புஸ்தகம். ரூ. 1—8—0.

எல்லாப் புஸ்தக வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

மகாராஜா புஸ்தகசாலை,
அருணசல முதலி வீதி, மதராஸ்.

---

## அமிர்த குணபோதினி

இதுபோன்ற நவீன மாதாந்த ஸஞ்சிகை இதுவரை தமிழில் வெளிவந்ததில்லை. இதிலுள்ள விஷயங்கள் யாவும் வாசிப்பவர்கள் மனதிற்குப் புதியதாகவும், அற்புதமாகவும் புலப்படும். இப்பத்திரிகையில் ஜாதி, மத வித்தியாசமின்றி சகல மதஸ்தர்களையும் களிக்கச்செய்யும் வியாஸங்களையும் யாவரும் முன்னேற்ற மடையக்கூடிய வழியையும் போதிப்பதை பிரதிமாத சஞ்சிகையிலும் காணலாம். இதில் மாதிரி காபி ஒன்றுவாங்கி வாசித்துப் பார்த்தால் பிறர் சிபாரிசு இல்லாமல் தாங்களே சந்தாவில் சேர்வீர்களென்பது நிச்சயம். பிரதிமாதம் 56 பக்கங்களுடன் வெளிவரும். வருஷ சந்தா ரூ 1. வெளிநாடு ரூ 1—4—0 மாதிரி காபி இனம்.

தி. இராஜகோபால் முதலியார்,
அமிர்த குணபோதினி ஆபிஸ்.
302, தங்கசாலைவீதி, மதராஸ்.

---

## உயரிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திராவிட வேதத்திரட்டு | 3 | 8 |
| திருப்புகழ் விருத்தியுரை | 6 | 0 |
| நால்வர் சரித்திரம் | 0 | 12 |
| ஷண்முக விஜயம் | 0 | 12 |
| திருமூலர் திருமந்திரம் | 2 | 4 |
| திருக்குறள் நீதிக்கதைகள் | 0 | 10 |
| கன்றுங் கனியுதவும் | 0 | 7 |
| திருப்புகழ்ப் பாராயணத் திருமுறை | 1 | 0 |

அல்லயன்ஸ் கம்பெனி,
மயிலாப்பூர், சென்னை.

---

## கணித சோதிடம்

பரகித கணிதப்படி கணிதஞ் செய்து பலன்கள் கூறப்படும். ஒரு வருஷத்திற்கு மாதவாரி பலன்கள் நுட்பமாயும் விவரமாயும் எழுதி அனுப்ப ரூபாய் இரண்டு. ஆருடம் 5 கேள்விகளுக்கு விவரமான பதில் எழுதி அனுப்ப ரூபாய் ஒன்று. விவாக விஷயம் ரூபாய் ஒன்று. விவாக விஷயத்தைப் பற்றி நாங்கள் எழுதி அனுப்புவதைக் கொண்டு பெண்ணுக்குப் புருஷனும் புருஷனுக்குப் பெண்ணும் இன்னொன்று வெகு சுலபமாய் நிச்சயிக்கலாம். எங்களிடம் அருமையான பூர்வீக ஜோதிடநூற்கள் பலவுள்ளதால், நாங்கள் எழுதி அனுப்பும் பலன்கள பொதுப் பலன்களாயிராமல் விவரமாகவும் சாஸ்திரீகமாகவு மிருக்கும். உங்கள் ஜாதககலாவதுகடிதம் எழுதும் நேரத்தையாவது தெரிவியுங்கள்.

தே. ஆறுமுக செட்டி,
முதலியார் பேட்டை, புதுச்சேரி.

---

## வெள்ளி பஸ்பம்

வெள்ளை, வெட்டை, மூலங்கள், எலும்புருக்கி, நீரிழிவு, ஷி சம்பந்த குன்மம் பெரும்பாடு எல்லாந் தீரும். தளர்ந்த தாது வலுக்கும். மற்ற நோய்களுக்கும் மருந்துண்டு. வியாதியின் விபரம் எழுதினால் தக்க பரிகாரம் மருந்துடன் தெரிவிக்கப்பெறும். 5 நாளில் நிச்சயம் குணம் தெரியும். 40 நாள் மருந்து ரூ. 5.

விலாசம்:—

சே. விசுவநாத செட்டியார்,
வைத்யம், லாலுகுடி, திருச்சி ஜில்லா.

வந்தேமாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு ௧ | விபவ௵ பங்குனி௴ ௧௪௳ (27—3—29) புதன்கிழமை | பரல் ௨௩

## இராமலிங்க சுவாமிகள்

### சமரச சன்மார்க்க சங்கம்

திரு. வி. க.

நிகழும் விபவ ஆண்டு, தைத்திங்கள், பூசநாள் விழாவையொட்டி வடலூரில் (26-1-29) கூடிய சமரச சன்மார்க்க மகாநாட்டில், திரு. வி. கலியாணசுந்தர முதலியார் தலைமை வகித்து நிகழ்த்திய முன்னுரை வருமாறு :—

III

போத நிலையில் சிவம் சோதிவடிவாகத் தோன்றும். அச்சோதி தரிசனம் பெறப்பெற உயிர்க்கு இன்ப உணர்வு பெருகிக்கொண்டே போகும். அப்போதத்தில் நிலைத்து நிற்போர் கீழ் நிலைகளில் வீழ்ந்து இடர்ப்படுதல் அருமை. ஆண்டிருந்து அவர் மேலே இவர்ந்தே செல்வர். அங்கேதான் காந்தம் இரும்பை ஈர்ப்பது போலச் சீவனைச் சிவன் ஈர்த்தல் நிகழும். சீவன் சிவனைச் சிக்கெனப் பிடித்துக் கொள்வான். சிவநாட்டமன்றி வேறு நாட்டம் சீவனுக்குறுது. "சோதியே சுடரே சூழொளி விளக்கே" என்று ஆண்டவனை விளித்துச் "சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந்தருளுவ தினியே" என்று மாணிக்கவாசகனார் அருளியது ஈண்டுப் பெரிதும் உன்னற் பாலது.

*　*　*

போத நிலையில் பொலிவுறும் அருட்சோதியைப் பற்றியும், அதனால் விளையும் இன்பத்தைப்பற்றியும் இராமலிங்க சுவாமிகள் அருளிய பாக்கள் பலப்பல. அவைகளுள் சிலவற்றை ஈண்டு எடுத்துக் காட்டுகிறேன்.

"கொழுந்தேனுஞ் செழும்பாகுங் குலவு பசும்பாலுங் கூட்டியுண்டாற்போ லினிக்குங் குணங்கொள் முடிக்கனியே, தொழுந்தேவ மடந்தையர்க்கு மங்கலநாண் கழுத்திற்றோன்றவிடங் கழுத்தினுள்ளே தோன்றி நின்ற சுடரே, எழுந்தேறு மன்பருளத் தேற்று திருவிளக்கே என்னுயிர்க்குத் துணையே யென்னிரு கண்ணுண் மணியே, அழுந்தே றவறியா தவ்வல நெஞ்சமந்தோ வபயமுனக் கபயமெனை யாண்டருள்க விரைந்தே"

"சோதி மலையிற் கண்டே னின்னைக் கண் களிக்கவே தித்தேனமுத மகத்தும் புறத்தும் பரிம ளிக்கவே, ஓதி யுணர்தற் கரிய பெரிய வுணர்வை நண்ணியே யோதா தனைத்து முணர்கின்றே னின்னருளை யெண்ணியே"

"எண்ணுந் தோறு மெண்ணுந் தோறு மென்னு ளினிக்குதே யிறைவ நின்னைப் பாட நாவி லமுதஞ் சனிக்குதே, கண்ணுங் கருத்து நின்பா லன்றிப் பிறர்பாற் செல்லுமோ கண்டே னுன்னை யினிமே லென்னை மாயை வெல்லுமோ"

"இறுகப் பிடித்துக் கொண்டேன் பதத்தை யினிநான் விடுவேனோ எந்தாய் பாதம் பிடித்த கையால் வேறுதொடு வனோ, குறுகப் பயந்து கூற்று மோடிக் குலைந்து போயிற்றே கோவே யுன்ற னருட்சிற் சோதி யென்ன தாயிற்றே"

"நீயே வலிந்திங் கென்னை யாண்ட நீதிச் சோதியே நின்னைப் பாட வென்னை வளர்க்கு நிமலச் சோதியே, தாயே யெனவந் தென்னைக் காத்த தருமச் சோதியே தன்மை பிறரா லரிதற் கரிய தலைமைச் சோதியே"

"ஈசனரு ளாற்கடலி லேற்ற தொருவோடம் ஏறிக்கரை யேறினே னிருந்த தொருமாடம், தேசுறுமம் மாடநடுத் தெய்வ மணிப் பீடம் தீபவொளி கண்டவுடன் சேர்ந்தது சந்தோடம்"

"நாதவரை சென்றுமறையோ ரனந்தங்கோடி நாடியிளைத் திருந்தன வாகமங்கள் பாகாத, போதவரை போந்துபல முகங்கொண்டு தேடிப் புணர்ப்பறியா திருந்தன வென் றறிஞர் புகல்வாரேல், பாதவரை வெண்ணீறு படிந்திலங்கச் சோதிப் படிவ மெடுத் தம்பலத்தே பாதநடம் புரியும், போதவரைக் காண்பதலாலவர் பெருமை யென்னல் புகல வசமாமோ நீபுகலா யென்றோழி"

இச்சோதி தரிசனம் பின்னை இறவா நிலை கூட்டுவதொன்றாகலான், இதனைப் பற்றிப் பாடிய அளவில் சுவாமிகள் நின்றார்களில்லை. அச்சோதியை மக்கள் வாயாரவாழ்த்தி வாழ்த்தியும், கண்ணாரக்கண்டு கண்டும் மனதிற் கொள்ளச் சில முறைகளையுஞ் சுவாமிகள் வகுத்தார்கள். அம்முறைகளுள் மூன்று சிறப்பாகக் குறிக்கத்தக்கன. ஒன்று, "அருட்பெருஞ்சோதி தனிப் பெருங் கருணை" என்னும் முழக்கம். மற்றொன்று வடலூர் சபையில் பூசநாளில் சோதிக்காட்சி வழங்கல் ; இன்னொன்று மேட்டுக் குப்பத்தில் என்றும் எரியும் விளக்கு. இச்சோதியை நினைத்தலும், சொல்லலும், வணங்கலுமே சுவாமிகள் கோலிய வழிபாட்டுமுறை யென்றுங் கூறலாம்.

*　*　*

நமது நாட்டில் விளக்கைக் கண்டதும் தொழும் ஒரு வழக்கமிருத்தல் உங்கட்குத்தெரியும். அதன் நுட்பம் என்னை? போத நிலையில் விளங்குஞ் சோதியை நினைப்பூட்டும் அறிகுறியே யாகும். "ஓசை யொலியெலாம்" என்னுந் திருத்தாண்டகத்தில், "தேச விளக்கெலாம் ஆனாய்நீயே" என்றும், "திருவை யாறக லாதசெம் பொற்சோதி" என்றும் அப்பர் சுவாமிகள் அருளிச் செய்ததை உன்னுக. சோதிநினைவு அருகிய இந்நாளில் சுவாமிகள் அதனைப் பெரிதும் பல வழியில் வலியுறுத்திச் சென்றார். இச்சோதி வழிபாடு இந்நாட்டில் பெருகுவதாக.

முதல் முதல் சோதி தரிசனம் நிகழும் இடம் புருவமத்தி என்று யோக நூல்கள் கூறும். அவ்விடத்தைக் குறிக்கவே நமது நாட்டார் சந்தனம் முதலியவற்றான் பொட் டிடுதலுமுண்டு. சுவாமிகள் அப்புருவ மத்தியைச் சுட்டிப்பாடிய பாக்களில் இரண்டொன்றைப் பார்ப்போம்.

"தனித்தபர நாதமுடித் தலத்தின்மிசைத் தலத்தே தலைவரெலாம் வணங்கநின்ற தலைவ நடராஜன், இனித்தசுக மறிந்துகொளா விளம்பருவந் தனிலே என்புருவ நடுவிருந்தான் பின்புகண்டே னில்லை, அனித்தமிலா விச்சரிதம் யார்க்குரைப்பே னந்தோ அவனறிவா னறிவே னயலறிவா ருளரோ, தனித்தநிலை விடுத்தொருகாற் சுத்தநிலை யதனிற் சுகங்கண்டும் விடுவேனோ சொல்லா யென்றோழி"

"கையறவிலாது நடுக்கண் புருவப்பூட்டு கண்டுகளி கொண்டுதிறந் துண்டுநடு நாட்டு, ஐயர்மிக வுய்யும்வகை யப்பர்விளை யாட்டு ஆடுவதென் றேமறைகள் பாடுவது பாட்டு"

இப்போத முடிவில் விளங்குவது வேதம். இக்கருத்துக் கொண்டே சுவாமிகளும் போதாந்தத்தின் பின்னர் வேதாந்தத்தை அமைத்தனரென்று யான் கருதுகிறேன்.

*　*　*

வேதாந்தம் : வேதம் என்பது அறிவு விளங்குமிடம். போதத்தில் சோதிமயமாய்த்திரண்டு காட்சியளித்த அறிவு, இப்பொழுது யாண்டும் விளங்குகிறது. இந்நிலையே வேத நிலையென்பது. இவ்வேத அந்தத்தில் எல்லாம் அறிவு மயமாய் விளங்கும். போதத்தில் ஓரிடத்தில் திரண்டு காட்சியளித்த சிவசோதி இங்கு யாண்டும் ஒளிர்கிறது. இப்பெரு நிலையை,

"ஒளியாகி யுள்ளொளியா யுள்ளொளிக்குள் ளொளியா யொளியொளியி னொளியா யவ் வொளிக்குளுமோ ரொளியாய், வெளியாகி வெளிவெளியாய் வெளியிடைமேல் வெளியாய் மேல்வெளிமேற் பெருவெளியாய்ப் பெருவெளிக்கோர் வெளியாய், அளியாகி யதுவாகி யதுமல் லதாகி யப்பாலாய் யப்பாலு மல்லதுவாய் நிறைவாந், தளியாகி யெல்லாமாய் விளங்குகின்ற ஞான சபைத் தலைவா நின்னியலைச் சாற்றுவதெவ் வணமே"

"வாக்கொழிந்து மனமொழிந்து மதியொழிந்து மதியின் வாதனையு மொழிந்தறிவாய் வயங்கிநின்ற விடத்தும், போக்கொழிந்தும் வரவொழிந்தும் பூரணமா யதுவும் போன பொழு தன்னபடி புகலுவதெப்படியோ, நீக்கொழிந்த நிறைவேமெய்க் கிலையேயென் னுடைய நேயமே யானந்த நிருத்தமிடும் பதியே, எக்கொழிந்தா ருளத்திருக்கு மிறையேயென் குருவே யெல்லாமா யல்லதுமா யிலங்கியமெய்ப் பொருளே"

"உடலெலா முயிரெலா முளமெலா முணர்வெலா முள்ளனவெலாங் கலந்தே யொளிமயம தாக்கியிரு ணீக்கியெக் காலத்து முதயாத்த மனமின்றி, யிடலெலாம் வல்ல சிவசுத்தி கிரணங்கி யாயேக மாயேகபோக வின்பநிலை யென்னுமொரு சிற்சபையி னடுவே யிலங்கிநிறை கின்றசுடரே, கடலெலாம் புவியெலாங் கனலெலாம் வளியெலாங் ககனெலாங் கண்டபரமே காணுத பொருளெனக் கலையெலாம் புகலவென் கண்காண வந்தபொருளே, தொடலெலாம் பெறவெனக் குள்ளும் புறத்துமெய்த் துணையாய் விளங்கு மறிவே சுத்தசிவ சன்மார்க்க நிதியேயருட் பெருஞ் சோதி நடராச பதியே"

"சிவமயமே வேறிலை யெல்லாமெனநீ தானே தேமொழியாய் பற்பலகால் செப்பியிடக் கேட்டேன், தவமயத்தார் பலசமயத் தலைவர் மதத்தலைவர் தத்துவர் தத்துவத்தலைவரவர் தலைவர் தலைவர், இவரவரென்ற பல்வேறு பிரித்தவர் பால்வார்த்தை யியம்புவதென்னென்றுநீ தென்கொ லென்றாய் தோழி, நவமயநீ யுணர்ந்தறியா யாதலி லிவ் வண்ண நவின்றனை நின்னைய மறநான் புகல்வேன்கேளே"

"ஒளியொன்றே யண்டபகிரண்டமெலாம் விளங்கி யோங்குகின்றதன்றி யண்டபகிரண்டங்களிலும், வெளிநின்ற சராசரத்து மகத்தினொடு புறத்தும் விளம்பு மகப்புறத்தினொடு புறப்புறத்தும் நிறைந்தே, உளநின்ற விருணீக்கி யிலங்குகின்ற தன்மை யுலகறியும் நீயறியா தன்றுகண்டாய்தோழி, தளிநின்ற வொளிமயமே வேறிலை யெல்லாந் தானெனவே தாகமங்கள் சாற்றுதல் சத்தியமே"

"பரமதனோடு லகுயிர்கள் கற்பனையே யெல்லாம் பகர்சிவமேயென வுணர்ந்தோமாதலினால்காமே, பிரமமெனப் பிறர்க்குரைத்துப் பொங்கி வழிந்தாங்கே பேசுகின்ற பெரியவர் தம்பெரியமதம் பிடியேல், உரமிகு பேருலகுயிர்கள் பரமிவைகாரியத்தாலுள்ளனவே காரணத்தாலுள்ளன வில்லனவே, தரங்குபோருளொளியாற் சிவமயமே யெல்லாந் தாமெனவே யுணர்வது சன்மார்க்க நெறிபிடியே"

என வருஉம் பாக்களால் சுவாமிகள் விளக்கியிருத்தல் காண்க. இவ்வேத அந்தத்தில் திகழ்வது சித்தாந்தம். யாண்டும் நீக்கமற நிறைந்தொளிரும் அருட்பெருஞ் சோதியைத் "தான் அஃது" என்னும் இரண்டற உணரும் ஒரு நிலை சித்தாந்த மென்பது. இதனை வேதாந்தத்தொடு தொடர்பு படுத்தியுங் கூறலாம்.

"பணிந்து பணிந்தணிந்தணிந்து பாடுமினோ வுலகீர் பரம்பரமே சிதம்பரமே பராபரமே வரமே, துணிந்துவந்த வேதாந்த சுத்தவனுபவமே துரியமுடியனுபவமே சுத்தசித்தாந்தமதாய்த், தணிந்தநிலைப் பெருஞ்சுகமே சமரசசன்மார்க்க சத்தியமேயி யற்கையுண்மைத் தனிப்பதியேயென்று, கனிந்துளத்

தேகனிந்து நினைந்துரைத்திடி லப்பொழுதே காணுதகாட்சியெலாங் கண்டுகொளலாமே"

"எவ்வுலகு மெவ்வுயிரு மெச்செயலுந் தோன்றி இயங்குமிட மாகியெல்லா முயக்குமிட மாகித், தெவ்வுலகு நண்புலகுஞ் சமனுகக் கண்ட சித்தர்கடஞ் சித்தத்தே தித்திக்கும் பதங்கள், இவ்வுலகில் வருந்தகடந் தென்பொருட்டா லிரவில் எழிற்கதவந் திறப்பித்தங் கென்கையிலொன் றளித்தாய், அவ்வுலக முதலுலக மனைத்துமகிழ்ந் தேத்த அம்பலத்தே நடம்புரியும் செம்பவளக் குன்றே"

இத்திருப்பாக்களின் உள்ளக் கிடக்கையை ஆராய்க.

* * *

"தான்" "அஃது" என்னும் இரண்டற்ற நிலைமீது விளங்கும் அநுபவங்கள் எழுத்தில் அடங்குவனவல்ல. அவைகளை ஏழையேன் எங்ஙனம் எடுத்துரைக்க வல்லேன்?

"நாதாந்தவரையு மெங்களையகனூர் செங்கோல் நடக்கின்ற தென்கின்றூர் நாதாந்த மட்டோ, போதாந்தநிலையுமுயர் யோகாந்த நிலையும் புனிதகலாந்தப்பதியும் புகல்கின்றூர் புகலும், வேதாந்தவெளியு மிகுசித்தாந்த வெளியும் விளங்குமிவற்றப்பாலு மதன்மேலப்பாலும், வாதாந்தத்ததன்மேலு மதன்மேலப்பாலும் மன்றூடி யருட்செங்கோல் சென்றூடலறியே"

என்றூர் சுவாமிகளும்.

* * *

இவ்வா றந்தங்களினும் படிப்படியாய் அவ்வந்த அநுபவமாய் விளங்குஞ் சிவம் ஒன்றே என்பதை,

"ஆறந்த நிலைகளின நுபவநிறைவேயது வதுவாயொளிர் பொதுவுறுநிதியே, கூறெந்த நிலைகளு மொருநிலையெனவே கூறுயெனுள்ளத்திற்கு லவியகளிப்பே, பேறிந்த நெறியெனக் காட்டியென்றனையே பெருநெறிக் கேற்றிய வொருபெரும்பொருளே, சாறெந்த நாள்களும் விளங்குமோர் வடல்வாய்த்தனி நடராசவென் சற்குருமணியே"

என்னும் பாட்டான் சுவாமிகள் விளக்கி யுள்ளார்.

* * *

ஈண்டுக் குறிப்பிட்ட அந்தங்களின் முறை தொகுப்புமுறையென்க. ஒவ்வோர் அந்தமுங் கோடிகோடி கூறுகளாகப் பிரிந்து பிரிந்து கிடத்தலைச் சுவாமிகள் பலவிடங்களில் அறிவுறுத்துகிறூர்.

"நல்லார்சொல் யோகாந்தப்பதிகள் பலகோடி நாட்டியதோர் போதாந்தப்பதிகள் பலகோடி, வல்லார்சொல்கலாந்த நிலைப்பதிகள் பலகோடி வழுத்துமொரு நாதாந்தப்பதிகள் பலகோடி, யில்லார்ந்த வேதாந்தப்பதிகள் பலகோடி யிலங்குகின்ற சித்தாந்தப்பதிகள் பலகோடி, யெல்லாம் பொருட்சோதித் தனிச்செங்கோல் நடத்து மென்னரசே யென்மாலையினிது புனைந்தருளே"

இவ்வாறந்தங்களில் நிகழும் ஒவ்வோர் அநுபவத்தையும் ஒவ்வோர் முகமாக ஞானிகள் கூறுவது வழக்கம். இக்கருத்துப்பற்றியே தமிழ் மக்கள் முழுமுதற் பொருட்கு ஆறுமுகங் கூறிஞர் போலும்! மனிதன் ஐந்தறிவால் பெரிய உண்மையை ஆராய்ந்தறிய இயலாது. ஆறுவது அறிவு விளங்கப் பெற்ற பின்னரே அவன் உண்மையுணரும் பேறு பெறுகிறன். இது குறித்து "முருகன் அல்லது அழகு" என்னும் நூலினும் என்கருத்தைத் தெரிவித்துள்ளேன். யோகாந்தம் முதலிய நிலைகளில் ஆண்டவன் வடிவம் ஒவ்வொரு விதமாகப் புலனுதலையும், முடிந்த நிலையில் ஆண்டவன்றன் சண்முகம் புலனுதலையுஞ் சுவாமிகள் தெள்ளத்தெளியக் கூறியுள்ளார்.

"யோகமே யோகத்தின் பயனே யோகத்தொருமுதலே யோகத்தி னேங்குந் தாய, போகமே போகத்தின் பொலிவே போகம் புரிந்தருளும் புண்ணியமே புனித ஞான, யாகமே யாகத்தின் விளைவே யாகத் திறையேயவ் விறைபுரியு மின்பே யன்பர், மோகமே மோகமெலா மழித்து வீறு மோனமே மோனத்தின் முளைத்த தேவே"

"காட்சியே காண்பதுவே ஞேய மேயுட் கண்ணுடையார் கண்ணிறைந்த களிப்பேயோங்கு, மாட்சியே உண்மையறி, வின்பமென்ன வயங்குகின்ற வாழ்வேமா மௌனக் காணி, யாட்சியே யாட்சிசெயு மாசே சுத்த வறிவேமெய் யன்பேதெள் ளமுதே நல்ல, சூட்சியே சூட்சியெலாங் கடந்து நின்ற அரியமே அரியமுடிச் சோதித் தேவே"

"மறைமுடிக்குப் பொருத்தமுறு மணியே ஞான வாரிதியே யன்பர்கடம் மனத்தே நின்ற, குறைமுடிக்குங் குணக்குன்றே குன்று மோனக் கோமளமே நாயசிவக் கொழுந்தே வெள்ளைப், பிறைமுடிக்கும் பெருமானே துளவ மாலைப் பெம்மானே செங்கமலப் பிரானே யிந்த, விறைமுடிக்கு மூவர்கட்கு மேலாய் நின்ற விறையேயிவ் வுருவுமின்றி யிருந்த தேவே"

"கோதகன்ற யோகர்மனக் குகையில் வாழுங் குருவேசன் முகங்கொண்ட கோவே வஞ்ச, வாதகன்ற ஞானியர்தம் மதியி லூறும் வானமுதே யானந்த மழையே மாயை, வேதகன்ற மூத்தர்களை விழுங்கு ஞான வேழமே மெய்யின்ப விருந்தே நெஞ்சிற், றீதகன்ற மெய்யடியர் தாக்கு வாய்த்த செல்வமே யெல்லையிலாச் சீர்மைத் தேவே."

இம்மகா தேவமாலைப் பாக்களை யோகக் கண்கொண்டு நோக்குமாறு அன்பர்களாகிய உங்களை வேண்டுகிறேன்; அவைகளைப் புராணக் கண்கொண்டு நோக்கி இடர்ப்படா திருக்குமாறு உங்களை வணங்கிக் கேட்டுக்கொள்கிறேன். ஆறந்த அநுபவங்களைப் புராணங்கள் கதை வடிவாகக் கழறும்.

* * *

இவ்வாறந் தங்களைப்பற்றி யான் அறிந்தவாறு சுருக்கிச் சொற்றேன். அவைகளின் நுட்பங்களைப் பெரியோர்பால் கேட்டுத் தெளிவுறுதல் நலன்.

* * *

இந்த ஷடாந்தத்தில் விளங்குவது சமரச சன்மார்க்க சங்கம். யோகம் முதலியவற்றில் நிலைப்படாது ஆணவத்தில் அழுந்திக்கிடப்போர் சமரச சன்மார்க்க நிலையெய்தல் அரிதே. ஆணவ மற்ற ஒரு நிலையை ஷடாந்த சமரசசன்மார்க்க சங்கம் என்று சுவாமிகள் அறிவுறுத்திப் போந்தார். இனிச் சமரச சன்மார்க்க சங்கத்தின்மீது கருத்துச் செலுத்துவோம்.

# பெண்ணினம்

## பெண் மக்களுக்கு வேண்டுவன யாவை?

ஸ்ரீமதி சா. மங்களதேவி பின்வருமாறு எழுதுகிறூர்:—

நல்ல அஸ்திவாரம் போட்டுக் கட்டப்படாத வீடு நீடித்தநாள் நிற்பதில்லை; அங்ஙனம் கட்டுகிறவனுக்கு அதிக பணச்செலவும் தேக சிரமமும் உண்டாவதோடு, பிறரால் பரிகசிக்கவும் படுகிறன். அதனுல் எந்த வேலை செய்யவேண்டுமாஞலும் முதல் நன்றாக யோசனை செய்து அந்த வேலைக்கு வேண்டிய அஸ்திவாரத்தைக் கெட்டியாகப் போடவேண்டும்; அப்படிப் போடா விட்டால் ஆரம்பிக்கப்பட்ட வேலை சிறியதாக இருந்தாலும் நன்றாக முடிவதில்லை.

நம் பெண் மக்களுக்குப் பசுக்களைப் போல அஞ்ஞானத்தினுல் உண்டாகி யிருக்கின்ற அர்த்தசை எல்லாருக்கும் தெரிந்த விஷயமே. இதனை நிவர்த்தி செய்ய என்ன உபாய மிருக்கிறது? இன்னும் அந்த வழிக்கு எப்படி அஸ்திவாரம் போடவேண்டும் என்பதைப் பற்றி ஆராய்வோம்.

உலகத்தில் அபிவிருத்தி அடையவேண்டுமென்ற ஆசையானது எல்லோருடைய மனதிலும் இருக்கிறது. இது ஸ்வபாவமே. இதர விஷயங்களில் தங்கள் தங்களுக்கு இருக்கப்பட்ட நிலையைக் கொண்டே திருப்தி யடைவது மனிதருக்கு மேலான குணமே; ஆனுல் வித்தை, ஞானம், அபிவிருத்தி இந்த மூன்று விஷயங்களில் மாத்திரம் தங்களுக்கிருப்பதே போதுமென்று சோம்பியிருப்பது சரியல்ல. கடவுள், மனிதனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் வாழ்க்கையில் அவன் அபிவிருத்தி யடையவேண்டுமென்பதே கடவுளின் முக்கியமான கருத்து. அதனுலேயே மனிதன் எவ்வளவு பெரிய அந்தஸ்திலிருந்த போதிலும் அதை விட மேலான பதவியையே விரும்புகிறன்.

அந்த அபேட்சை கடவுள் மனிதனுடைய நன்மைக்காகவே கொடுத்திருக்கிறூர் என்பதை அறிந்து கொள்ளவேண்டும். ஏனென்றுல் ஒவ்வொரு மனிதனிடத்திலும் இந்த அபேட்சை நிலைகொண்டிருப்பதால் அவனவனும் தன்னுடைய அபிவிருத்திக்காகப் பிரயத்தனப்படுகிறன்; இப்படி எல்லோரும் பிரயத்தனப்படுவதால் தேசம் முன்னேற்றத்தை யடைய மார்க்கமுண்டாகிறது.

அபேட்சை என்பதில் இருவிதமுண்டு. ஒருவனுக்கு அபிவிருத்தி யடைவதில் எப்பொழுது ஆசை அதிகரிக்கிறதோ, அவன் தன் ஆசையை நல்வழியில் கொண்டு செலுத்தினுல் நன்மை அடைகிறன்; கெட்ட வழியில் செலுத்தினுல் கேட்டை அடைகிறன். இந்த எண்ணம் உண்டாகிறபோதெல்லாம் அதை நல்வழியில் பிரவேசிக்கச் செய்ய வேண்டும். அதனுல் எல்லோருக்கும் நன்மை உண்டாகிறது. இம்மாதிரியான அபேட்சை ஸ்திரீகளிடத்திலும் இருக்கிறது. ஆனுல் நம் தேசத்தில் ஸ்திரீகள் முன்னேற்ற மடையும் வழி மூடுண்டு கிடப்பதால், அதைத் திரும்பவும் பெறவேண்டிய மார்க்கத்தைத் தேடவேண்டிய தவசியமாயிருக்கிறது.

## ஸ்திரீகள் அஞ்ஞானிகளா?

ஸ்திரீகள் அஞ்ஞானிகளாகவும் பலமில்லாதவர்களாகவு மிருக்கிறூர்கள்; பாராதீனராகவு மிருக்கிறூர்கள். ஞானிகளாவதற்கு அவர்களுக்கு வழி தெரிவதும் இல்லை. இந்த ஸ்திதியில் அவர்களால் என்ன செய்யக்கூடும் என்கிறூர் சிலர். அப்படிச் சொல்வது நியாய விரோதமாகக் காண்கிறது. கடவுள் அஞ்ஞானமுள்ள பசு பட்சி முதலான எல்லாப் பிராணிகளுக்கும் தங்கள் தங்கள் நன்மையைத் தேடிக்கொள்ளும் சக்தியைக் கொடுத்திருக்கிறூர். அப்படியிருக்க எல்லாவற்றிற்கும் மேலான, உத்தமமான மனித ஜன்மத்திற்கு அவர் அந்தச் சக்தியைக் கொடுக்கவில்லை என்பது அசம்பாவிதமாக இருக்கிறது. சம்சாரத்தில் இன்னொருவருடைய உதவி யில்லாமல் யாருக்கும் முடிவதில்லை. இந்த உதவிக்கே பராபேட்சை என்று பெயர். அஃது எல்லா ஜீவராசிகளுக்கும் இருப்பது போன்றே ஸ்திரீகளிடத்தும் இருக்கின்றது.

நாங்கள் மேலான ஸ்திதிக்கு வரவேண்டுமென்ற அபேட்சை எங்களுக்கு உண்டு; அதற்குப் பிரயத்தனப் படுவதற்கு எங்களுக்கு ஒரு வழியும் இல்லை யென்று அநேக ஸ்திரீகள் சொல்லுகிறூர்கள். ஏனென்றுல் அவர்கள் எப்பொழுதும் மற்றவர்களை அநுசரிக்க வேண்டிவர்களா யிருக்கிறூர்கள். இப்படிச் சொல்லுவதிலும் சில அமிசங்கள் உண்மையாக இருக்கின்றன; இருந்தாலும் அவர்களுடைய மேலானஸ்திதி அவர்களுடைய முயற்சியிலேயே கூடுமானதா யிருக்கிறது. ஈசுவரன் மனிதனுக்கு, தான்பெரியவனுக வேண்டுமென்ற எண்ணத்தைக் கொடுத்திருப்பது போலவே, அந்த எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளத் தக்க சக்தியையும் கொடுத்திருக்கிறன். தங்களுடைய நிலைமையை அபிவிருத்தி செய்து கொள்ளும் மார்க்கம் எல்லோருக்கும் பிரயத்தன சாத்தியமாக இருக்கிறது. இதற்காக மற்றவர்களை எதிர் பார்ப்பது அநாவசியம். மனிதர்கள் திடமான எண்ணத்துடனும் ஆலசியமில்லாமலும் பிரயத்தனப்பட வேண்டும். அப்படிச் செய்தால் ஸ்திரீகள் இன்னும் கொஞ்ச காலத்திற்குள் மேலான ஸ்திதிக்கு வருவார்களென்பதில் ஐயமில்லை.

உலகில் ஜனங்கள் தங்களுக்கு வழி தெரியாமலிருந்தால் பிறர் நடக்கும் மார்க்கத்தைக்கேட்டும்பார்த்தும் அதை அநுசரித்துத் தாங்களும் அந்த வழியில் செல்லுகிறூர்கள். இதுபோன்றே தாங்கள் மேலான ஸ்திதிக்கு வருவதற்கும் வழி தெரியாம லிருந்தால் அப்பொழுது, பெரியவர்கள் எந்த உபாயத்தினுல் எப்படி மேலான நிலைமையை யடைந்தார்கள் என்பதைக் கேட்டு, பார்த்து, தெரிந்துகொண்டு, அவரைப் போலவே நடக்க வேண்டும். மேலான ஸ்திதியை யடைவதற்கு இதுவும் ஒரு வழியாகிறது.

## தன்னம்பிக்கை

தன்னம்பிக்கை என்பது மனிதனுடைய அபிவிருத்திக்கு முதல் படியாகவுள்ளது. இவ்வுலகில் தன்னம்பிக்கை உள்ளவர்கள் மிக எளிதில் முன்னேற்ற மடைகிறூர்கள். இப்பொழுது நம்மால் கொண்டாடிப் புகழப் படுபவர்களாகிய பெரியோர்களெல்லாரும் தன்னம்பிக்கை புடையவராகவே இருந்தார்கள். மனிதனுக்கு இந்த ஒரு குணம் இருந்தால் உற்சாகம், நிச்சய புத்தி, சத்திய விரதம் முதலானவைகள் தங்களுக்குத் தாங்களே வந்து அவனை அடைகின்றன. மேகங்களை விட்டு எப்படி மின்னல் இல்லையோ அப்படி முன் சொன்ன குணங்களை விட்டு உன்னத ஸ்திதி யிருப்பதில்லை.

தன்னைத் தான் நம்பமுடியாமல் எல்லா விஷயங்களுக்கும் மற்றவரையே எதிர் பார்க்கிறவன் எக்தக் காலத்திலும் அபிவிருத்தி யடைவதில்லை. "எவன் தனக்குத் தானே சகாயம் செய்து கொள்ளுகிறனே அவனுக்குக் கடவுள் சகாயம் செய்கிறூர்" என்று ஒரு பழமொழி இருக்கிறது. கடவுள் மனிதனுக்கு புத்தியையும், பகுத்தறிவையும் கொடுத்திருப்பதனுல் இவைகள் நாளாவட்டத்தில் சரியான நிலையை யடைகின்றன. இவைகளைச் சகாயமாகக் கொண்டு தன்னம்பிக்கையோடு கிரமமாக மேலான ஸ்திதிக்கு வருவது சாத்தியமேயாகும்.

## தன்னம்பிக்கையின் சிறப்பு.

பசு பட்சி முதலான பிராணிகளுக்கிருப்பது போலவே மனிதனுக்கும் பராபேட்சை இருக்கிறதென்றும், இவ்வளவுக்கு மாத்திரமே மனிதனுக்கு பராபேட்சை யுண்டென்றும், எல்லா விஷயங்களிலும் பராதீன மிருக்கிறதென்றும் சொல்லக்கூடாது.

ஒரு மனிதன் சிரமப்பட்டு மற்றொருவனுடைய வேலையைச்செய்தால், அவன் இவனுக்கு அந்த வேலைக்காகப் பணத்தைக்கொடுத்தாகிலும் அல்லது எவ்விதத்திலாகிலும் சந்தோஷிப்பித்தால், இவ்விருவரில் யாரை பராதீனனென்று சொல்ல வேண்டும்? உலகத்தில் சம்சாரத்தை நடத்தவேண்டுமாஞல் எல்லோருக்கும் எல்லோருடைய சகாயமும் வேண்டியிருக்கிறது. எல்லோரும் யாதாவதொரு விதத்தில் மற்றவர் ஆதீனத்திலிருக்க வேண்டியிருக்கிறது. இப்படி இல்லாதிருந்தால் ஜன சமுதாயம் கடிவாளமில்லாத கொழுத்த குருட்டுக் குதிரையைப் போன்று விசாரமில்லாமல் மனதிற்கு வந்தவழியெல்லாம் போய் கடைசியில் ஆபத்தை யுண்டாக்கும். இது சுவாதீனம் என்னப்படமாட்டாது. சுயேச்சாசாரமே என்னப்படும்.

ஒரு மனிதன் இன்னொருவனுக்கு உபகாரத்தைச் செய்து அவனிடமிருந்து பிரதியுபகாரத்தைப் பெற்றுக் கொள்ளுவதினுல் அவனுடைய சுவாதீனம் கொஞ்சங்கூட குறைவடைவதில்லை. தங்களுடைய மனதையும், புத்தியையும், தங்களுக்கு நல்லதென்று தோன்றுகிற வழியில் செலுத்தி நன்மையை அடைவதற்கு எல்லோரும் சுதந்திரரா யிருக்கிறூர்கள். இதனுல் சுவாதந்தரியத்தை விடாமல், அநுசரித்து தங்களுடைய ஸ்திதியை அபிவிருத்தி செய்துகொள்ளும் சக்தி எல்லா மனிதர்களிடத்திலும் இருக்கிறதென்பது நிச்சயமாகிறது.

மேற்சொன்ன பிரகாரம் உன்னத ஸ்திதி யடைவதற்குத் தன்னம்பிக்கை வேண்டும். மனிதர் தன்னம்பிக்கையுடன் யாதாவதொரு காரியத்தைச் செய்தால் அதன் பலன் கொஞ்சமாவது அவருக்குச் சுகத்தைக் கொடுக்கிறது. மற்றவருடைய நம்பிக்கையினுல் செய்யப்பட்ட காரியத்தின் பலன் இதைவிடப் பெரியதாகிலும் அவ்வளவு சுகத்தைக் கொடுப்பதில்லை. தன்னம்பிக்கையுள்ளவர்கள் நாளுக்கு நாள் எப்படி உற்சாகிகளாயும், சுகிகளாயு மாகிக்கொண்டு வருகிறூர்களோ அப்படியே பர நம்பிக்கையுள்ளவர்கள் உற்சாக மில்லாதவர்களாகியும், சுகமில்லாதவர்களாயும் தேஜோ வீனர்களாயுமிருக்கிறூர்கள். நாம் எவ்வளவுக் கெவ்வளவு பிறருடைய சகாயத்தைக் கோருகிறூமோ அவ்வளவுக் கவ்வளவு நாளடைவில் நம்முடைய பலமும் குறைந்து கொண்டே வருகிறது; புத்தியும் மந்தமடைகிறது. கடைசியில் நாம் செய்கையற்றவராய் எல்லா விஷயங்களுக்கும் இதாருடைய முகத்தையே பார்க்க வேண்டியதாகிறது. முடிவில் நாம் அபேட்சை யற்றவராய் சுகப்படும் ஆசையையே விடவேண்டியதாகிறது. முடிவில் நாம் அபேட்சை யற்றவராய் சுகப்படும் ஆசையையே விடவேண்டியதாகிறது. நம்மால் ஒன்றும் ஆகாமல் போனுல் மற்றவர்கள் ஒரு காரியமும் செய்யமாட்டார்கள். இந்தஸ்திதியில் நமக்குச் சுகத்தினுடைய ஆசை எதற்கு? யாருக்குத் தன்னம்பிக்கை இல்லையோ அவருக்குச் சுதந்திரமும் இல்லை. இந்த ஸ்திதியில் மனிதன் பிழைத்திருப்பதும் வீணே. பூமிக்கு பாரமென்று எண்ணத்தக்க ஸ்திதியில் இருப்பதைப் பார்க்கிலும் பிறவாமலிருப்பது மேல்; பிறந்த வுடனே இறந்து போவதாகிலும் நல்லது. சுகத்திற்குக் காரணமான தன்னம்பிக்கை இந்தக் காலத்து ஸ்திரீகளில் ஒருவரிருவரிடத்தில் இருந்தாலும் அவரால் ஸ்திரீ சமுதாயத்திற்கு மிகவும் குறைவான நன்மையே உண்டாயிருக்கிறதென்று கூறலாம்.



# அடக்குமுறை தாண்டவம்

## தொழிலாளர் தலைவர் பலர் கைது செய்யப்பட்டனர்

இந்தியா அரசாங்கத்தார் உத்தரவின் கீழும் மிஸ்டர் ஹார்டன் தாக்கல் செய்த பிராதின் மேலும் மீரட்டு ஜில்லா மாஜிஸ்ட்ரேட் சுமார் 30 பேர்களைக் கைது செய்யவும் சுமார் 200 ஸ்தலங்களைச் சோதனை செய்யவும் வாரண்டு பிறப்பித்திருக்கின்றூர். அநேகமாக எதிரிகள் எல்லோரும் கைது செய்யப்பட்டு விட்டதாகத் தெரிகின்றது. வாரண்டுகள் பிறப்பிக்கப்பட்ட வீடுகளெல்லாம் சோதனை செய்யப்பட்டு விட்டதாகவும் தகவல் கிடைத்திருக்கின்றது. எதிரிகள் பெரும் பான்மையோர் கல்கத்தாவையும், பம்பாயையும் சேர்ந்தவர்கள். சுமார் 6 பேர் ஐக்கிய மாகாணங்களைச் சேர்ந்தவர்கள்.

### பூனு

20-3-29ல் மாஜி தொழிலாளர் தலைவரும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினரும், அபேத வாதத் தலைவருமான ஸ்ரீமான் தண்டிராஜ தெங்காடி, அரசருக்கு விரோதமாக யுத்தம் புரிந்ததாக 121-ஏ பிரிவுப்படி குற்றஞ்சாட்டப்பட்டுக் கைது செய்யப்பட்டார். அன்று காலையில் நூற்றுக்கணக்கான போலீஸார் ஐரோப்பியஉத்தியோகஸ்தர்களுடனும் ஐரோப்பிய சார்ஜண்டுகளுடனும் மோட்டார் லாரிகளில்வந்து ஸ்ரீ தெங்காடியின் வீட்டைச்சூழ்ந்து கொண்டனர். வாரண்டைக் காண்பித்து அவர் வீட்டைப் பரிசோதனையிட்டுச் சில புத்தகங்களையும் தஸ்தாவேஜிகளையும் கைப்பற்றினர். அவ்விதமே வாரண்டுகளைப் பிறப்பித்து 'சித்திரசாலை' என்னும் அச்சுக கூடத்தையும், 'சித்திரமாயாஜகத்' ஆசிரியரான ஸ்ரீமான் தியோகிரிகார் வீட்டையும் பரிசோதனை செய்தனர். பூனு இளைஞர்சங்கத் தலைவரான ஸ்ரீமான் என்.வி.காத்கில் இல்லத்தைச் சோதனை செய்து ஜவஹர்லாலுடனும், மற்ற அங்கத்தினர்களுடனும் எடுத்துக்கொண்ட புகைப்படமொன்றைக் கைப்பற்றினர். சிலவிடங்களில் போலீஸார் காவலாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்தனர்.

### பம்பாய்

20-3-29-காலை 8-மணி முதற்கொண்டு பம்பாய் நகரின் பலவிடங்களிலும், இளைஞர் சங்கக் காரியாலயத்திலும், அச்சங்கத் தலைவரான ஸ்ரீமான் நாரிமன் வீட்டிலும், பல தொழிலாளர் சங்கக் காரியாலயங்களிலும், "பிரீபிரஸ்" காரியாலயத்திலும் சோதனை கள் போடப்பட்டன. போலீஸார் பலவிடங்களிலிருந்து சில கடிதங்களையும், ஓர் இடத்திலிருந்து 'டைப்' அடிக்கும் இயந்திரமொன்றையும் கைப்பற்றினர்.

கிர்னி காமகர் (பஞ்சாலை) சங்கத் தலைவரும், உபதலைவருமான ஸ்ரீமான்கள் எ. ஏ. ஆல்வே, காஸ்லி, 'கிராந்தி' என்னும் மராத்தி பத்திரிகையைச் சேர்ந்த உஸ்மான்கான், ஜி. எம். ஆதிகாரி, பொதுவுடைமை கட்சியின் ஆங்கில வாரப்பத்திரிகையின் ஆசிரியர் இவர்கள் கைது செய்யப்பட்டார்கள்.

பம்பாய் போலீசாரும் பக்கத்து பகுதிகளிலுள்ள போலீசாரும் சுமார் 150-பேர் 20௳ காலை முதல் சுமார் 150வாரண்டுகளுடன்எல்லாப்பகுதிகளும்பற்பலஇடங்களைச்சோதனை செய்தார்கள். இளைஞர் சங்கம், பொதுவுடைமைக் கட்சிச் சங்கம், விவசாயிகள் சங்கம், இச்சங்கங்களுடன் சம்பந்த முடையவர்களெனச் சந்தேகிக்கப் படுகிறவர்கள், இவர்களுடைய வீடுகள் சோதனை செய்யப்பட்டன.

பம்பாய், மடுங்கா முதலிய பகுதிகளிலுள்ள இளைஞர்களின் கிளைச்சங்கங்களெல்லாம் சோதனை செய்யப்பட்டன.

பந்தர்ாவுக்குப் பக்கம் காஹரிலுள்ள மிஸ்டர் எஸ். எச். ஜாப் வாலாவின் வீடு 100 பேர்களுக் கதிகமாக ஆயுதந் தாங்கிய போலீசாரால் சூழப்பட்டிருந்தது. மீரட்டு ஜில்லா மாஜிஸ்டிரேட்டு இங்கே 124-ஏ பிரிவின்கீழ் பிறப்பித்த வாரண்டு மேல் இவர் கைது செய்யப்பட்டார்.

மிஸ்டர் ஜாப்வாலா அண்மையில் ஜான்ஸியில் கூடிய விவசாயிகள் மகாநாட்டில் தலைமை வகித்தார். இவருடைய வீடு இன்று காலை 5-மணி நேரம்வரை சோதனை செய்யப்பட்டது. போலீசார் பல புத்தகங்கள், பத்திரிகைகள் படங்கள் முதலியவைகளை எடுத்துச் சென்றனர்.

ஐரோப்பிய பத்திரிகா நிருபரான மிஸ்டர் லெஸ்டர் ஹட்சின்சனின் வீடும் சோதனை செய்யப்பட்டது. அவருடைய பாஸ்போர்ட், புத்தகங்கள், பத்திரிகைகள் முதலிய 36 சாமான்கள் போலீசாரால் கைப்பற்றப்பட்டன. இவருடைய வீடு 3 மணி நேரம் சோதனை செய்யப்பட்டது. இவர் சமீபத்தில் இளைஞர் சங்கத்தில் சில சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்.

தாதர், கிர்காம் முதலிய பகுதிகளிலுள்ள தொழிலாளர் சங்கங்களும்,தொழிலாளர்சங்க தலைவர்களின் வீடுகளும் சோதனை செய்யப்பட்டன. ஸ்ரீமான்கள்நிம்கர்,டாங்கே,மிராஜ்கார் லால்ஜி, பெண்ட்ஸே, கேட் முதலிய தொழிலாளர் தலைவர்களெல்லோரும் 124-ஏ. பிரிவின்கீழ் கைது செய்யப் பட்டார்கள்.

ஆலைகள் இருக்குமிடங்களில் கலகங்களும் சச்சரவும் ஏற்படாமல் தடுப்பதற்காக ஆங்காங்கு இராணுவப்படைகள் போலீஸ் ஸ்டேஷன்களில் தயாராக வைக்கப்பட்டிருந்தன.

தொழிலாளர் தலைவர்கள் கைது செய்யப்பட்ட செய்தி காலை 10-மணிக்கு டாடா ஆலைக்கு எட்டியதும் தொழிலாளர்களெல்லோரும் உடனே ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டு ஒரே கட்டாக வெளிச்சென்று விட்டார்கள்.

"அட்வொகேட் ஆப் இந்தியா" என்ற பத்திரிகையின் சொந்தக்காரர் வாசஞ் செய்யும் 'ஆரிய பவன்' போலீஸாரால் சோதனை செய்யப்பட்டது.

தலைவர்கள் கைது செய்யப்பட்ட இச்செய்தியைக் கேட்டவுடன் சுமார் ஆறு ஆலைகளிலுள்ள தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்துவிட்டார்கள்.

'பிரீபிரஸ்' காரியாலயம் இந்தியா அரசாங்கத்தாரால் பிறப்பிக்கப்பட்ட வாரண்டின்மேல் சோதனை செய்யப்பட்டது. பொது உடைமைக் கட்சி சம்பந்தமான ஏதேனும் பிரசுரம் இருக்கிறதா வென்பதைப் பார்க்க இக் காரியாலயம் சோதனை செய்யப்பட்டது என்று 'நேஷனல் ஹெரால்டு' பத்திரிகை கூறுகிறது.

பம்பாயில் கைது செய்யப்பட்ட ஒன்பது பேர்களும் பிஷாவர் எக்ஸ் பிரஸில் மீரட்டுக்கு அனுப்பப் பட்டார்கள்.

20-3-29ல் தொழிலாளர் சங்கத் தலைவர்கள் கைது செய்யப் பட்டது முதல் 14 ஆலைகள் வேலை செய்யாமல் சும்மா இருக்கின்றன. மூன்று ஆலைகளில் சொற்ப பகுதிகள்மட்டும் வேலை செய்து வருகின்றன.

ஜி. ஐ. பி ரயில்வே தொழிலாளர்கள் கூட்டமொன்று 21-3-29 ல் இரவில் நடைபெற்றது. ரெயில்வே தொழிலாளர் சங்கத்தைப் போலீசார் சோதனை செய்ததையும் மிஸ்டர் ஜாப்வாலாவைப் போலீசார் கைது செய்ததையும் தொழிலாளர்கள் குறிப்பிட்டு பேசினர்கள். கைது செய்யப்பட்ட ரெயில்வே தொழிலாளர் தலைவர்களுடைய வழக்கில் எதிர் வழக்காட நிதி சேர்ப்பதென்று தலைவர்கள் கைது செய்யப்பட்டதை கண்டனஞ்செய்து வெள்ளிக்கிழமை ஒரு நாள் பாரலிலும், மாடுங்காவிலும் தொழிலாளர்கள் வேலை நிறுத்தஞ் செய்வதென்றும் தீர்மானிக்கப்பட்டன.

22-2-29 மாடுங்கா தொழிலாளர் வேலை நிறுத்தஞ்செய்து விட்டார்கள். பாரல் தொழிலாளர்களும் வேலை நிறுத்தஞ் செய்வார்களென்று தெரிகின்றது. இன்று காலை முதல் இராணுவ ஏற்பாடு பலமாக இருக்கின்றது.

25-3-29-ல் அடக்குமுறை கண்டன கூட்டமொன்றிற்கு விஜயஞ் செய்திருந்த ஸ்ரீமான் கே. என். ஜோகேல் என்பாரைப் போலீஸார் கைது செய்தனர்,

### கல்கத்தா

20-3-29 கல்கத்தாவில் 35 இடங்களில் போலீஸார் இ. பி. கோ. 121 ஏ. பிரிவின்படி (அரசருக்கு விரோதமாக யுத்தஞ் செய்ததாக) சோதனை செய்ததாகத் தெரிகிறது. சோதனை செய்யப்பட்ட இடங்களாவன: ஆநந்த பஜார் காரியாலயம், ஸ்ரீ கௌரங்கா அச்சுக்கூடம், சரஸ்வதி அச்சுக்கூடம், இளைஞர் புத்தகாலயம், விவசாயர் தொழிலாளர் சங்கக காரியாலயம், வங்காள தொழிலாளர் சங்கக் காரியதரிசியான ஸ்ரீமான் கிஷோரிலால் கோஷ் வீடு. ஒவ்வோர் இடத்திலும் பொது வுடமை கட்சி சம்பந்தமான பல புத்தகங்களும் ஆண்டு பிரசுரங்களும் கைப்பற்றப்பட்டன. சோதனை செய்யப்பட்ட இடங்களில், ஸ்ரீமான்கள் ஸ்பிராட், முஸபர் ஆமத், விவசாயர் தொழிலாளர் கட்சியைச் சேர்ந்த ஷம்ஷல் ஹுதா இஷோரிலால் கோஸ், காளிகுமாரஸென், ராதாராம் மித்ரா, பாங்கி முகர்ஜி முதலிய தொழிலாளர்தலைவர்கள்மீரட்மாஜிஸ்டிரேட் உத்திரவின் மீது கைது செய்யப்பட்டார்கள். அவர்களுடைய கடிதம், சவர், டைப் அடிக்கும் இயந்திரம், தஸ்தாவேஜி முதலியவைகளும் கைப்பற்றப்பட்டன.

### லட்சுமணபுரி

20-3-29 லட்சுமணபுரியில் சட்டசபை அங்கத்தினரும், விவசாயிகள் சங்க உப காரியதரிசியுமான ஸ்ரீமான் சௌதரீ தர்மவீரஸிங்கு கைது செய்யப்பட்டார். அவருடைய வீடும் சோதனை யிடப்பட்டு தஸ்தாவேஜிகளையும் கைப்பற்றினர்.

### லாகூர்

20-3-29 லாகூரில் மீரட்டுஜில்லா மாஜிஸ்ட்ரேட் உத்தரவின்படி ஸ்ரீமான்கள் லாலா கித்ராநாத் ஸாகால், எம். ஏ. மஜீத் கைது செய்யப்பட்டார்கள்.

### அமிருதசரஸ்

20-3-29 அமிர்தசரஸில் பஞ்சாப் போலீஸார் "கீர்த்தி" பத்திரிகை காரியாலயம், 'ஜங்கா' அச்சுக்கூடம் இவைகளைச் சோதனையிட்டு 'கீர்த்தி' பத்திரிகையின் பிரதிகளையும் கைப்பற்றினர். 'கீர்த்தி' பத்திரிகையின் காரியஸ்தர், பொதுக் காரியதரிசி இவர்களுடைய வீடுகள் பரிசோதனை செய்யப்பட்டன. அப்பத்திரிகையின் டைரக்டர்களில் ஒருவரான ஸோஹன் ஸிங்கு ஜோஷி கைது செய்யப்பட்டு அவருடைய வீடும் சோதனையிடப்பட்டது.

### சந்த்பூர்

20-3-29 சந்த்பூரில் வக்கீல் பிரோ ஜங் திரலால் சக்கிரவர்த்தியின் வீட்டை போலீஸார் சோதனை செய்தனர். வங்காள ஜனரல் ஆலைத் தொழிலாளர் சங்கத் தலைவர் ஸ்ரீமான் காளிதாஸ் பட்டாச்சாரி, காரியதரிசி, ஸ்ரீமான் கோபேந்திர கிருஷ்ண சக்கிரவர்த்தி இவர்கள் மீரட்டுஜில்லாவாரண்டின் மேல் கைது செய்யப்பட்டார்கள். இம்பீரியல் பாங்கைச் சேர்ந்த ராகல் சந்திர பாஸக்கின் வீடும் சோதனை செய்யப்பட்டது.

### அலகாபாத்

20-3-29 அலகாபாத்தில், சட்டக் கல்லூரி மாணவரும், இளைஞர் சங்கக் காரியதரிசியுமான ஸ்ரீமான் பிரான் சந்திரஜோஷி கைது செய்யப்பட்டு அவரிடமிருந்து பல தஸ்தாவேஜிகள் கைப்பற்றப்பட்டன. ஜான்ஸியில் தொழிலாளர் விவசாயசங்கக் காரியதரிசி ஸ்ரீமான் காளியான் கைதுசெய்யப்பட்டு மீரட்டுக்குக் கொண்டு போகப்பட்டார்.

தொழிலாளர் தலைவர்கள் கைது செய்யப்பட்டதன் சம்பந்தமாக மாணவர்களிடை உண்டான பரபரப்பினுலும், உற்சாகத்தினுலும் 21-3-29ல் அலகாபாத் இளைஞர் சங்கத்தில் 500 பேர் அங்கத்தினராகச் சேர்ந்தனர். அங்கத்தினரைச் சேர்த்துக்கொள்ளும் பாரங்கள் போலீஸாரால் எடுத்துச் செல்லப்பட்டமையான், புதிய பாரங்கள் உடனே அச்சிடப்பட்டன.

### குஸ்தியா

20-3-29- குஸ்தியா (பரித்பூர்) வில், மாஜி சட்டசபை அங்கத்தினரான ஸ்ரீமான் ஹேமந்தா குமார்சர்க்கார் வீடும், ஜகரான் அச்சுக்கூடமும் போலீஸார் சோதனை செய்து அண்மையில் நடைபெற்ற ரையத்துகள் மகாநாடு சம்பந்தமான சில தஸ்தாவேஜிகளும் 'டைப்' இயந்திரம் ஒன்றும் கைப்பற்றினர். இங்கு ஒருவரும் கைது செய்யப்படவில்லை.

### கான்பூர்

20-3-29- கான்பூரில் தொழிலாளர் சங்கத்தையும், சங்கக் காரியதரிசியான ஸ்ரீமான் பண்டித ஹரி ஹரிநாத்சாஸ்திரியின் வீட்டையும் போலீஸார் சோதனை செய்தனர். புத்தகங்கள் முதலியவைகள் கைப்பற்றப்பட்டன.

### மீரட்

20-3-29 மீரட்டில் நயா பஜாரிலுள்ள ஸ்ரீமான் கௌரிசங்கரின் வீடும், ஸ்ரீமான் ராமசரண் வித்தியார்த்தி வீடும், தொழிலாளர்- விவசாயிகள் சங்கக்காரியாலயமும் சோதனையிடப்பட்டு சில தஸ்தாவேஜிகளும், புத்தகங்களும் எடுத்துச் செல்லப்பட்டன.

இ. பி. கோ. 121-ஏ பிரிவின்கீழ் பிறப்பிக்கப்பட்ட வாரண்டின்மேல் ஸ்ரீமான் கௌரிசங்கர் கைது செய்யப்பட்டனர்.

### டாக்கா

21-3-29 காலை லாகேஸ்வரி பருத்தி ஆலையின் காரியதரிசியான கோபால் சந்திர பாஸிக்கைப் போலீஸார் கைதுசெய்தார்கள்.

டாக்கா சிறையில் இப்பொழுது காவலில் இருந்தவரும் மிஸ்டர் விப்னுத பானர்ஜியுடன் இவர் மீரட்டுக்கு விசாரணைக்கு அனுப்பப்படுவா ரெனத் தெரிகின்றது. விலோ தொழிற்சாலை சம்பந்தமாக ஏற்பட்ட குழப்பத்தை யொட்டி இவர் விசாரிக்கப்படுவாரெனத் தெரிகின்றது.

### காசி

21-3-29 காசி சர்வகலா சாலை மாணவர் பரமானந்த திருவடியான் இருப்பிடத்தை போலீசார் சோதனை செய்து சில தஸ்தாவேஜுகளைக் கைப்பற்றிக் கொண்டார்கள்.

கைது செய்யப்பட்டவர்கள் உஸ்மானி, தாங்கேயுள்பட எல்லோரும் 23-3-29-ல் டெல்லி மார்க்கமாக மீரட்டுக்குச் சென்றூர்கள். திவான் சாமன்லால் இவர்களை ஸ்டேஷனில் கண்டு பேசினர். எதிரிகளுக்குச் சிற்றுண்டிகளைக் கொடுத்தார். எதிரிகள் போலீஸ் பாதுகாப்பில் மூன்றுவது வகுப்பு வகுப்பு வண்டியில் அழைத்துச் செல்லப்பட்டார்கள். எதிரிகள் சார்பாக ஆஜராகி விவாதிக்க திவான் சமன்லால் மீரட்டுக்குப்போகிறூர்.

## ஆப்கன் நிலை

ஜெனரல் நாதர்கான் பாச்சா சாகோவுக்கு விடுத்திருக்கும் கடிதமொன்றில், பாச்சா சாகோ அமீர் பதவிக்குத் தகுதியற்றவனென்றும், ஆப்கன் தேசத்துக்குத் தகுதியான ஓர் அரசரைத் தேர்ந்தெடுக்கத் தம்முடன் ஒத்துழைக்கவேண்டுமென்றும், இல்லையேல்தாம் அவருக்கு எதிராக ஏனையவகுப்புகளைத்தூண்டிக் கலகஞ் செய்ய நேருமென்றும் குறிப்பிட்டிருந்தார்.

ஜலலாபாத்திலும், கோஸ்டிலும், மொகமண்டு ஜாதியார் வசிக்கும் பிரதேசங்களிலும் அமைதியின்மையைக் கண்ட ஜனங்கள் அமானுல்லாவின் அரசையே விரும்புகின்றூர்கள். ஆப்ரிதிகள் என்னும் ஜாதியார் ஷின்வாரிகளைத்தாக்க வாரம்பித்து விட்டனர் என்று தெரியவருகிறது. காபூலிலிருந்து 21-3-29ல் பிஷாவருக்கு வந்து சேர்ந்த சில வியாபாரிகள் கூறுவதாவது:—"காபூலில் ஜனங்களுக்குள் மிகுந்த குழப்பமும் அச்சமும் ஏற்பட்டிருக்கின்றன. அமானுல்லா படை, சாகோ யுத்தத்திற்கு அனுப்பிய 10000 பேர் கொண்ட படையைத் தோற்கடித்துவிட்டது. அமானுல்லா காபூலைத் தாக்க கஜினிக்கு வந்திருக்கிறூர். அவர்கஜினி, காபூல் பாதைகளிலுள்ள பனி உருகும்வரை காத்துக்கொண்டிருப்பார். அவரே படைத் தலைமை வகிக்கப் போகிறூர் என்று தெரியவருகிறது. கஜினியில் ஆகாய விமான ஸ்தலம் ஒன்று ஏற்பட்டிருக்கிறது."

23-3-29ல் காபூலிலிருந்து பெஷாவருக்கு வந்து சேர்ந்த 6 ஜெர்மானியர்கள் தாங்கள் வழியில் 60 கொள்ளைக்காரர்களால் தாக்கப்பட்ட விவரத்தையும், காபூலில் பாச்சா சாகோவுக்கு ஜனங்களின் ஆதரவு குறைந்து கொண்டே வருகிறதென்பதையும் கூறினர்கள். அமானுல்லா தந்தியின்படி ஆலி அஹமது ஜான் 26-3-29-ல் காந்தஹாருக்குப் புறப்பட்டுச் சென்றூர். அரசர் அமானுல்லாவின்படை காபூலுக்கு 20 மைல் தூரத்தில் வந்திருப்பதாக ஒரு செய்தி கூறுகிறது. இதனுல் காபூலின்மீது அதி விரைவில் படையெடுக்கப்படுமென்று தெரிகிறது.

## குருட்டுத் தச்சர்

ஓஹியோ மாகாணத்தைச் சேர்ந்த ஈாக்டன் என்னுமூரில் ஜான் டெயிலர் என்னும் ஒரு தச்சவேலை செய்வோர் இருக்கிறூர். இவர் இளமையிலேயே கண்ணிழக்கப் பெற்றூர். ஆயினும் சுமார் முப்பது வருஷங்களாகத் தச்ச வேலையையே செய்து பணஞ் சம்பாதிக்கிறூர். இவர் இதுவரை சுமார் ஆறு வீடுகள், தம் கையாலேயே கட்டியிருக்கிறூராம். இவர், தமது சுத்தியை எடுத்து வேலை செய்யும்போது, எந்த இடத்திலே அந்த அடி விழ வேண்டுமோ அந்த இடத்திலேயே அது விழுமாம். ஆணிகளைச் சரியான இடங்களில் அடிப்பதில் இவர் சிறிதும் பிசகினது கிடையாது. இவர், சமீபத்தில், தமது சொந்த வீட்டிற்கு ஆறு அறைகளைக் கட்டி முடித்தார்.

சென்னைப் புலால் மறுத்தல் சங்கம்:— இச்சங்கத்தின் இரண்டாம் ஆண்டு விழா ஸ்ரீமான் எஸ். முத்தையா முதலியார் பி. ஏ., பி. எல்., எம். எல். ஸி. அவர்கள் தலைமையின் கீழ், சென்னை மௌண்ட் ரோட்டிலுள்ள 'அஞ்சுமான்' மண்டபத்தில் 2-4-29-ல் பிற்பகல் 4-30-மணிக்கு, நடைபெறும். இதன் சம்பந்தமாக அன்றிரவு 8-மணிக்கு இராயப்பேட்டை "ஹிந்து மாடர்ன்" ஓட்டலில் ஒரு சமரஸ விருந்து நடைபெறும். இவ்விருந்தில் கலந்துகொள்ள விரும்புவோர், மேற்படி சங்கக்காரியதரிசி, கத்தீட்ரல் போஸ்ட் என்ற விலாசத்துக்கு ரூபாய் ஒன்று அனுப்பி வைப்பின், அவர்கள் பெயரைப் பதிவு செய்து கொண்டு அநுமதிச் சீட்டொன்று அனுப்பப்படும் என்று காரியதரிசி தெரிவிக்கிறூர்.

# மணித்திரள்

வாழைப்பழம் முதன் முதலாக எகிப்திலேயே உற்பத்தியாயிற்ரும்.

* * *

ஒவ்வொரு வருஷமும், இந்தியாவில் எழுபது கோடி மணங்கு உப்பு செலவாகிறது.

* * *

ஒரு லட்சத்துக்கு அதிகமாயுள்ள டெலிபோன்கள் இருக்கிற நகரங்கள் உலகத்தில் முப்பத்தொன்று இருக்கின்றன.

* * *

மேனாட்டு ஸ்திரீகள், முகத்தில் தடவிக் கொள்ளும் பவுடர்கள், சிக்கி மூக்கிக்கல்லைப் பொடி செய்தே உண்டாக்கப்படுகின்றன.

* * *

சமுத்திரத்திலே உற்பத்தியாகும் நத்தைகள், வருஷத்திற்கு மூன்று அல்லது நான்கு முறை ஆணாகவும் பெண்ணாகவும் மாறுகின்றனவாம்.

* * *

தென்னமெரிக்காவி லுள்ள சுதேசிகள், ஆட்டு மந்தைகளைக் காப்பதற்காக, நாய்களுக்குப் பதிலாக, கொக்குகளை வைத்து வளர்க்கிறார்களாம்.

* * *

ஒரு பவுண்டு சர்க்கரை சாப்பிட்டால் தேசத்திற்கு எவ்வளவு பலம் வருமோ, அந்த பலம் அரை பவுண்டு வெண்ணெய் சாப்பிட்டால் வருமாம்.

* * *

இங்கிலாந்தில் நூற்றறுபத்தெட்டு துறைமுகங்கள் இருக்கின்றன; சுமார் 2459 எக்ராக்கள் விஸ்தீரணமுள்ள நீர் நிலைகளில் கப்பல்கள் தங்குகின்றன.

* * *

அமெரிக்காவி லுள்ள ஓர் ஆட்டிலிருந்து இருபத்தைந்து பவுண்டு கம்பளமயிர் எடுக்கப்பட்டது. இவ்வளவு அதிகமான மயிர் எந்த ஆட்டினின்றும் எடுக்கப் பட்டதில்லையாம்.

* * *

சாதாரணமாக அனைவராலும் உபயோகிக்கப்படும் பௌண்டன பேனாவை, பென்சிலாகவும் உபயோகித்துக் கொள்ளுமாறு அமெரிக்காவில் ஒருவர் கண்டு பிடித்திருக்கிறார்.

* * *

குறைந்தது அரை அவுன்ஸ் கிச்சிலிப் பழரசமும், அரை அவுன்ஸ் எலுமிச்சம் பழ ரசமும் தினந்தோறும் ஒருவன் சாப்பிட வேண்டு மென்று ஒரு வைத்தியர் கூறுகிறார்.

* * *

உலகமெங்கும் பரவியுள்ள இரட்சணிய சேனை (சால்வேஷன் ஆர்மி) உத்தியோகஸ்தரில் எவருக்கும், வருஷத்தில் ஐந்நூறு பவுனுக்குமேல் அதிகமாகச் சம்பளம் கிடையாது.

* * *

காக்கைவலி நோயுடையோர்க்கு, பாம்பின் விஷத்தைக்குத்தி ஏற்றினால், அந்நோய் குணப்பட்டு விடுகிற தென்று தென்னாப்பிரிக்காவிலுள்ள ஒரு டாக்டர் கண்டு பிடித்திருக்கிறார்.

* * *

ஆலிவர் கோல்ட்ஸ்மித், சார்லஸ் டார்வின், ராபர்ட் கிளைவ் முதலிய அறிஞர்கள், இளமையில் மிகுந்த போக்கிரிகளாகவோ, மந்தமதியுடைய வர்களாகவோ இருந்தார்களென்பது குறிப்பிடத்தக்கது.

* * *

லண்டன் நகரத்தில் மட்டும் நானூறு சினிமா காட்சி சாலைகள் இருக்கின்றன. கிளாஸ்கோவில் 115 ம், மான் செஸ்டரில் 105-ம் பர்மிங்ஹாமில் 83-ம், லீட்ஸில் 60-ம் சினிமா காட்சிச் சாலைகளிருக்கின்றன.

* * *

மின்சார சக்தியினால் இயங்கக் கூடிய கைரம்பம் ஒன்று அமெரிக்காவில் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. இதைக்கொண்டு எவ்வளவு சிறிய அளவுக்கும், எந்த மரச்சாமானையும் துண்டித்துக் கொள்ளலாம்.

* * *

காலி போர்னியாவிலுள்ள ஒரு பிடில் பதினைந்தடி உயரமுள்ளது. இதை வாசிக்க வேண்டுமானால், இதனை நிற்கவைத்து, ஐந்தடி உயரமுள்ள மேடைமீது ஒருவன் நின்றுகொண்டே வாசிக்க வேண்டுமாம்.

* * *

நூற்றைம்பது பவுண்டு நிறையும், ஒன்பது அடி நீளமும் உள்ள ஒரு துப்பாக்கி, அமெரிக்காவிலுள்ள ஒரு தனிகரிடத்தில் இருக்கிறது. இதைக்கொண்டு ஒரே சமயத்தில் ஐந்நூறு வாத்துகளைச் சுடலாமாம்.

* * *

"பிரசிடெண்டு" கப்பலில், அக்கப்பற்றலைவரால் ஒரு பூனை வளர்க்கப்பட்டு வருகிறது. இது முதுமைப் பருவமுடையது. இதற்கு வாரமொன்றுக்கு ஒன்றரை ஷில்லிங் உபகாரச் சம்பளம் கொடுக்கப்பட்டு வருகிறது.

* * *

இங்கிலாந்திலுள்ள ஸ்கார்பரோ என்ற ஊரில் தவளை உருவம் மாதிரி அமைக்கப்பட்டுள்ள ஒரு மோடார் வண்டி இருக்கிறது. இது பூமிமீது மோடார் ரதமாகவும், தண்ணீரின்மீது மோடார் படகாகவும் உபயோகிக்கப்படுகிறது.

* * *

1928ம் வருஷம் மார்ச்சு மாதம் 31-ந் தேதியோடு முடிய ஒரு வருஷத்தில் மட்டும், கம்பியில்லாத் தந்தி ஸ்தாபனங்களுக்குக் கட்டணங்கள் விதித்ததன் மூலமாக மட்டும் தபாலாபீசுக்கு 1234,898 பவுன் வரும்படி கிடைத்திருக்கிறது.

* * *

மண் வெளிப் பாம்புகளுக்கு வயிற்றிலேயே மூளை அமைக்கப்பட்டிருக்கிறதென்றும், அவைகளுக்கு ஞாபக சக்தி உண்டென்றும், அவைகளைக் குறித்த ஒரு வழியில் செல்லும்படி செய்யலாம் என்றும் ஒரு ஜெர்மனிய பிராணி நூற்புலவர் கூறுகிறார்.

* * *

உலகத்திலேயுள்ள கடிகாரங்களில் மிகப் பெரிய கடிகாரம் ஒன்று அமெரிக்காவிலுள்ள ஜெர்ஸி நகரத்திலிருக்கிறது. இதன் நிமிஷத்தைக் காட்டும்முள்ளானது, இருபது அடி எட்டு அங்குலம் நீளமுடையது. இதனைத் தூக்கிச்செல்லப் பதினேழு பேர் வேண்டியிருந்தது.

* * *

செயற்கை இடிகளைத் தயாரித்து, அவைகளை ஒரு படையின்மீது பிரயோகித்தால், இயற்கையாகஓர்இடிஆகாயத்திலிருந்துவிழுந்தால், என்ன தீமை விளையுமோ அந்தத்தீமையே மேற்படிசெயற்கையிடியினா லுண்டாகுமாம். இத்தகைய இடிகள், எதிர்கால யுத்தங்களில் பிரயோகிக்கப்படக் கூடும்.

* * *

இப்பொழுது மோடார் சைகிள்களில் மாத்திரந்தான், இன்னொருவர் உட்கார்ந்து கொள்ள ஒரு பீடம் அமைக்கப்பட்டிருக்கிறது. இதற்கு "சைட்கார்" என்று சொல்லப்படுகிறது. ஜர்மனியில், பெரும்பாலோர் சாதாரண சைகிளையே "சைட்கார்" மாதிரி அமைத்து உபயோகிக்கிறார்கள்.

* * *

பெல்ஜியத்தில் ஒரு பணக்காரர் இருக்கிறார். இவருக்குக் கால் இல்லை. இவர், காற்று வாங்க வெளியே செல்லுகையில், தமது முச்சக்கர வண்டியில் உட்கார்ந்து கொள்ள, அவருடைய பக்தியுள்ள நாய் அவ்வண்டியை எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் தள்ளிச் சென்று, திரும்பி வீடு வந்து சேருமாம்.

* * *

அமேஸான் நதிக்கரையிலுள்ள பிரேஜில் காடுகளில் பிடிக்கப்பட்ட ஒரு சிறிய குரங்கு மூன்று அவுன்ஸே எடையுள்ளதா யிருக்கிறது. உலகத்திலே யுள்ள குரங்குகளில் இதுவே மிகவும் சிறியதென்று சொல்லப்படுகிறது. இதை வளர்க்கும் ஒரு ஸ்திரீ, தன் புறங்கையில் இதை வைத்துக் கொண்டு விளையாட்டு காட்டுகிறாள்.

* * *

சுமார் பதின்மூன்றரை டன் தானியத்தை ஏற்றிச் செல்ல, லண்டனிலுள்ள ஒரு தானிய வியாபாரக் கம்பெனியார், ஒரு மோட்டார் லாரியைத் தயாரித்திருக்கின்றனர். இந்த லாரிக்கு ஆறுசக்ரங்கள் இருக்கின்றன. இந்தப் பதின்மூன்றரை டன் தானியத்தை இந்த லாரியில் ஏற்றவும் இறக்கவும் சராசரி இருபத்தைந்து நிமிஷங்களே யாகின்றன.

* * *

சைனா தேசத்தில், சீனபாஷையில் ஒரு பெரிய அகராதி தயாரிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு "சின்-டிங்-கு-சின்-டு-ஷு-ஐ-சீ-செங்" என்று பெயர். இது ஐயாயிரம் புஸ்தகங்கள் (வால்யூம்கள்) கொண்டது. இந்த அகராதியின் எடை ஒரு டன், பதினைந்து அந்தர் வெயிட் என்பது பவுண்டாகும். இந்த அகராதியை அச்சிட நாற்பது வருஷங்களாயின.

* * *

சமீபத்தில் ஐரோப்பா கண்டத்தில் குளிர் மிகுதியால் எங்கும் பனி உறைந்து போயிற்றென்பது நேயர்களுக்குத் தெரியும். ராட்லெட் என்ற ஊரில் ஏ. ஜே. லீ என்பார், நான்கு பொன்னிற மீன்கள் பனியால் உறைந்து கிடக்கக் கண்டார். அந்த இடத்தில் உஷ்ணத்தைக் கொடுக்க, பனிக்கட்டி கரைந்து போயிற்று. ஆனால், நான்கு மீன்களும், நீந்திக்கொண்டு சென்றுவிட்டன!

## தண்ணீர்ப் பஞ்சம்

### கிராமவாசிகளின் பரிதாபநிலை

ஸ்ரீமான் சக்ரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் பின்வருமாறு எழுதுகிறார்:—

காந்தி ஆசிரமத்துக் கருகிலுள்ள எல்லபாளையம் கிராமத்தில் நாற்பது குடும்பத்தார் வசிக்கிறார்கள். இவர்களில் பெரும்பான்மையோர் வேளாளக் கவுண்டர்கள்.

கிராமக் கிணற்றின் இடிந்த மண்சுவரின் மேல், கையில் குழந்தையுடன் ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள்.

"நீ கூடப் பினாங்குக்குப் போகிறாயா?" என்று அவளை நான் கேட்டேன்.

"ஆமாம், வேறே என்ன செய்வது?" என்று அவள் கூறினாள். கிணறு எந்த மட்டில் இருக்கிறது என்று பார்ப்பதற்காக அருகில் சென்று எட்டிப்பார்த்தேன். அடித்தரை வறண்டு கிடந்தது. அங்கு மத்திய பிராயமுடைய ஸ்திரீ ஒருத்தி கவிந்து கொண்டிருந்தாள். அவள் அருகில் ஒரு சிறு பெண் நின்றிருந்தாள். அந்தஸ்திரீ அடித்தரையில் ஒரு மூலையில் கசிந்து கொண்டிருந்த தண்ணீரை ஒரு கொட்டங்கச்சியினால் எடுத்துப் பானையை நிரப்பிக்கொண்டிருந்தாள்.

"நீயும் போகிறாயா?" என்று அவளைக் கேட்டேன்.

"பினாங்குக்கா? நான் போகவில்லை, சாமி! வீட்டில் கிழவன் சாகக்கிடக்கையில் எப்படி விட்டுவிட்டுப் போக முடியும்?" என்று அவள் பதிலளித்தாள். பிறகு பானையைத்தூக்கித் தலையில் வைத்துக்கொண்டு மேலே ஏறிவரத் தொடங்கினாள்.

பானை நிறையப் பளிங்குபோன்ற தண்ணீர் அவள் எப்படித்தான் நிரப்பினாளோ தெரியாது. கட்டாந்தரையிலிருந்து தண்ணீர் எடுக்கும் அரும்வித்தையை இந்த சகோதரிகள் பயின்றிருக்கிறார்கள். நீங்களும் நானுமா யிருந்தால் கிணற்றைப் பார்த்ததும் மனச்சோர்வு கொண்டு திரும்பிப் போய் விடுவோம். ஆனால் இவர்கள் அரைமணியும் அதற்குமேலும் உட்கார்ந்திருந்து சொட்டுச் சொட்டாகத் தண்ணீர் எடுத்துப் பானையை நிரப்பிவிடுகிறார்கள்.

"எல்லாரும் போகிறார்களே, எதற்காக? கிணற்றில் ஜலம் இல்லை யென்று தானா?" கேட்டேன்.

"குடிப்பதற்குத் தண்ணீர் இல்லை; தின்பதற்கும் சோறில்லை. வேறே என்ன செய்வது?" என்று அவள் கூறினாள்.

இதற்குள்ளாக கிராமக் கணக்குப்பிள்ளை அங்கு வந்து சேர்ந்தார். "மிட்டாதாரை இந்தக்கிணற்றைத் தோண்டிக்கொடுக்கும்படி சொல்லக்கூடாதா? நல்லதர்மமாயிருக்குமே?" என்றுஅவரிடம் சொன்னேன்.

"தர்மகாரியந்தான். ஆனால் மிட்டாதாருக்கு எத்தனையோ தொல்லைகள். கடன் அடைப்பதற்காக அவரே நிலம் விற்றுக் கொண்டிருக்கிறார்" என்றார் கணக்குப் பிள்ளை.

"குடி தண்ணீருக்கு ஜனங்கள் என்ன தான் செய்வார்கள்?"

"என்ன செய்வது? சாக வேண்டியது தான்! இல்லாவிட்டால் பினாங்குக்காவது கண்டிக்காவது போய்ப் பிழைக்க வேண்டும். சென்ற வருஷம் வீட்டுக்கு ஒரு ரூபா வீதம் வரி வசூல் செய்து சில அடி ஆழம் கிணற்றைத் தோண்டினோம். கொஞ்சம் தண்ணீர் கிடைத்தது. இந்த வருஷம் மறுபடியும் வற்றிப்போய் விட்டது. மிட்டாதாரிடம் அவருடைய சொந்தச் செலவில் இவ்வருஷம் தோண்டிக் கொடுக்கும்படி சொன்னேன். அவர் தம்மாலாகா தென்கிறார்."

இந்த துரதிஷ்டம் பிடித்த பிரதேசம் சென்ற எட்டுவருஷகாலமாக தெய்வங்களின் கோபத்துக்கு ஆளாகி யிருக்கிறது. கடைசியாக இங்கு மழை பெய்தது 1921-ம் வருஷத்தில் தான். எட்டு வருஷமாக இடைவிடாத காய்ச்சல். ஜனங்கள் தெய்வங்களை இரங்கச் செய்வதற்கு எல்லா முறைகளையும் கையாண்டு பார்த்து விட்டார்கள். பலி கொடுத்தார்கள். இரவு நேரத்தில் திறந்த வெளியில் கூடி ஒப்பாரிவைத்து அழுதார்கள். ஒன்றிலும் பயனில்லை. நூல் நூற்பதை நிறுத்திவிட்டால் மழை பெய்யு மென்று யாரோ சொன்னார்களாம். அப்படியும் செய்து பார்த்தார்கள். அதனால் கஷ்டம் அதிகமானது தான் கண்டபலன். இந்த கிராமங்களி லெல்லாம் ஜனத் தொகை நாளுக்கு நாள் குறைந்து வருகிறது. எல்ல பாளையம் கிராமத்தின் 40 குடும்பங்களி லிருந்து இதுவரையில் 36 ஸ்திரீ புருஷர்கள் மலாய் நாட்டுக்குப் போய் விட்டார்கள். நான்கு விதவைகள் உள்பட இன்னும் 20 பேர் இந்த வியாழக்கிழமை புறப்படப் போகிறார்கள். இவர்கள் போய்விட்டால் பாக்கியிருப்போர் அநேகமாக கிழவர்கள் நோய்ப்பட்டவர்கள் முதலியவர்கள்தான்.

ஜனங்களுடைய க்ஷேமலாபங்களில் கண்ணுங் கருத்துமா யிருப்பதாகச் சொல்லிக் கொள்வோருக்கு இந்நிலைமை பெருமை தருவதன்று. வெளிநாடுகளுக்குப் போவதினால் கஷ்டம் தீர்ந்து விட்டதாகாது. ஏனெனில் திடகாத்திர முள்ளவர்கள் போய்விட்டால் திக்கற்றவர்கள் பலர் பாக்கி இருக்கிறார்கள். வேறு விதமான சகாயம் எதுவும் செய்வதற்கு முன்னால் குடி தண்ணீருக்காவது ஏதேனும் வழி செய்தாக வேண்டும். சுகாதார இலாகா அதிகாரிகளும் ஜில்லா போர்டு தலைவரும் இந்த வேண்டுகோளுக்குச் செவி சாய்ப்பார்களா?





## காந்தியடிகளின் பர்மா விஜயம்

### மாண்டலேயில்

மாண்டலேயில் 18-3-29 மாலை 6 மணிக்குக் காந்தியடிகள் ஒரு பொதுக்கூட்டத்திற்பேசினார்; அக்கூட்டத்திற்கு வரவேற்புக்கமிட்டி உபதலைவரான ஸ்ரீமான் யூ கியா யான் தலைமை வகித்துப் பேசியதின் சாரம்:— "மகாத்மா இந்தியா மட்டுமென்றி, உலகமே போற்றும் உத்தமர். அவரது தூய்மை வாழ்க்கையே அவருடைய புகழுக்குக் காரணம். காந்திஜியின் உபதேசமான சத்தியாக்கிரகம் அமிருத சரவில் வெற்றி பெற்றது. அவர் காட்டிய வழியினால் பர்தோலியில் வரி கொடா இயக்கம் வெற்றிகரமாக நடந்தது. எனவே, இனி சுதந்திரத்தை விரும்பும் நீங்கள் மகாத்மாவின் உபதேசங்களுக்கு மிகவும் கவனத்துடன் செவி மடுப்பீர்களாக"

பின்னர் யூ பா ஷிவே என்பார் மகாத்மாவின் நற்போதனைகளைப் பின்பற்றி நடக்கும்படி வலியுறுத்திப் பேசினார்.

காந்தியடிகள் பதிலளிக்கையில் ஹிந்தியில் பேசியதின் சுருக்கம்:—அஹிம்ஸா தர்மத்தைப் பின்பற்றுபவர்களான பர்மியர்கள் மாமிசம் சாப்பிடுவதைக் குறித்து மிகவும் ஆச்சரியமுறுகிறேன். அஹிம்சை அஞ்சாமையைப் போதிக்கிறது. ஆனால் நான் எனது பிரயாணத்தில் பர்மியர்கள், புங்கிகளுங் கூட எல்லாவற்றிற்கும் அஞ்சுகிறார்கள்; சிறை, அரசாங்கத்தார் அவர்களுடைய வேலைக்காரர்களுக்குங் கூட பயப்படுகிறார்கள். பர்மாவிலுள்ள ஜனங்கள் புத்தர் பெருமானின் உபதேச மொழிகளை உண்மையுடனும் பக்தியுடனும் பின்பற்றுவார்களானால் பர்மா சிறந்த நிலைக்கு வந்துவிடுமென்பது திண்ணம்."

காந்தியடிகள் இந்தியர்களை நோக்கி சில உரைகள் பகன்ற பின்னர், பணம் வசூலாயிற்று. காந்தியடிகளுக்கு அளித்த மோதிரங்களும், சில ஆபரணங்களும் ஏலம் போடப்பட்டது. மொத்தம் ரூ 11,000 வசூலாயிற்று.

19-3-29 காந்தியடிகள் காலை பின்மானாநகரை அடைந்தார்: அங்கு வரவேற்புக் கமிட்டித் தலைவர் யூ லா யூ, ஸ்ரீமான் பி.கே. ஹல்தார் (அட்வோகேட்) முதலியவர்களால் நன்குவரவேற்கப்பட்டார். ஹல்தார் இல்லத்தில் கூடிய பெண்கள் கூட்ட மொன்றில் ரூ500 பணமுடிப்பொன்று அடிகளுக்கு அளிக்கப்பட்டது.

அன்றுமாலை 7-30 மணிக்கு பின்மானா நகர சபையார். நகரசபை தோட்டத்தில் உபசாரப்பத்திரமொன்று பர்மியமொழியில் வாசித்துக் கொடுத்தனர். அதில் குறிப்பிட்டிருந்ததின் சாரமாவது:— காந்தியடிகள் உலகத்துக்கே ஒரு பெரியார். இவரால் உண்டாக்கப்பட்ட சாத்வீக ஒத்துழையா இயக்கம் உலக சரித்திரத்திலேயே ஒரு புதிய மாறுதலை உண்டாக்கியுள்ளது. இவர் தீண்டாமையை அழிப்பவர்; அஹிம்சாதர்மப் போதகர்; இந்தியாவின் பெரிய நெசவுக்காரர்; கைராட்டினத்தின் ஓசையாகிற பாட்டினால் உலகத்தையே தம் வயப்படுத்த முயன்று வருபவர்.

மகாத்மா பதிலளிக்கையில் பிள்ளைகளும் பெண்களும், தங்கள் சமயத்தின் போதனைகளைப்பின்பற்றி முன்னேற்றமடைவார்களாக என்று கூறினார்.

### மாணவர்களுக்குச் சுத்தஞ் செய்யும் வேலை

அடிகள் கே. மி. எம். பள்ளிக்கூடத்துக்கு அழைத்துச்செல்லப்பட்டார். அங்குப் பொது ஜனங்களின் சார்பாக ஓர் உபசாரப் பத்திரம் வாசிக்கப்பட்டதுடன் ரூ. 2700 அடங்கிய பண முடிப்பொன்றும் அளிக்கப்பட்டது. அதற்கு மகாத்மா பதிலளிக்கையில் நிகழ்த்திய சொற்பொழிவு வருமாறு:—"நகர சபையார் பிள்ளைகளுக்கு இலவச கல்வி போதிப்பது குறித்து திருப்தி யடைகிறேன். இப்பள்ளிக் கூடத்துக்கு வரும் வழியிலுள்ள தெருக்களிலும் தடைத்தெருக்களிலும் சாக்கடை நாற்றம் வீசுவதை யுணர்ந்தேன். சாக்கடைகளையெல்லாம் உடனே சுத்தஞ்செய்ய வேண்டும். நகரசபை அங்கத்தினர்கள் நேர்மையானவர்களாயிருப்பின், அவர்களே சாக்கடைகளைச் சுத்தஞ்செய்யலாம். மேலும் இந்நகரிலுள்ள மூன்று உயர்தரப் பள்ளிக்கூடங்களிலும் உள்ள பிள்ளைகளுக்குச் சுத்தஞ்செய்யும் வேலையைக் கற்பித்தல் வேண்டும். இப்பிள்ளைக ளனைவரும் ஒன்று சேர்ந்து இவ்வேலையில் ஈடுபட்டால், ஒரே நாளில் இந்நகரம் சுத்தமடைந்து விடும்" முடிவில் இந்தியர்கள் பர்மியர்களுடன் ஒத்துழைக்க வேண்டுமென்றும், கதரின் அவசியத்தைப்பற்றியும் வற்புறுத்திப் பேசினார். ரூ 8750 வசூலாயிற்று.

### அஹிம்சையின் தத்துவம்

பின்னர்அடிகள் பின்மானாவைவிட்டு தாங்கூவிற்கு வந்து சேர்ந்தார். மாலை 6 மணிக்கு நகர சபையின் சார்பாகவும், பொதுமக்களின் சார்பாகவும் இரண்டு உபசாரப் பத்திரங்கள் வாசித்துக் கொடுக்கப்பட்டன. அவ்விடத்தில் ரூ 4601 பணமுடிப்பையும் பெற்றார். அப்போதுமகாத்மாஅஹிம்சையின் தத்துவத்தை விளக்கிக்கூறியதின் சாரம்:— அஹிம்சை சூரியனைப்போன்று உயிர், ஒளி, அமைதி, இன்பம் இவைகளைப் பிரகாசிக்கச் செய்கிறது. அஹிம்சைதர்ம கோட்பாடுடையவர்கள் வாழும் இந்நாட்டில் அமைதியும் சந்தோஷமும் காணோம். எனவே புத்தரின் உபதேசம் மக்கள் மனதில் பதியாமல் நிலமட்டத்திலேதான் பரவி யிருக்கிறது போலும்! எங்கு அஹிம்சா தர்மம் நிலவுகிறதோ, அங்கு அழுக்காறு, தீங்கு முதலியவைகள் தலை காட்டா, ஆனால் பர்மியர்கள் பல கட்சிகளாகப் பிளவுபட்டிருப்பதாக அறிகிறேன். பர்மாவில் கொலை என்பது சர்வ சாதாரணமா யிருக்கிறது. புங்கிகளை நோக்கிக்கூறுவதாவது: இந்தியாவில் ஏதேனும் தீங்கு நிகழுமேல், அத்தீங்கைக் களைய ஆசாரியர்களும், ஞானிகளும் தவமேற்கொண்டனர். கௌதமர்கூட ஞான வெளிச்சத்தைக்காண காட்டிற்குச் சென்று தவம் புரிந்தார். புங்கிகளனைவரும் புத்தரின் வழியைப் பின்பற்றி அஹிம்சையின் உண்மைப் பொருளை உணர்ந்தால், அவர்கள் இந்நாட்டிற்குப் புத்துயிர் அளிக்கக்கூடும்."

மதுவிலக்கு, கதர் இவைகளைக் குறிக்க வற்புறுத்திப் பேசியபின்னர் ரூ. 5500 வசூலாயிற்று. காந்திஜீ தாங்கூவை விட்டு கயாட்காவிற்கும், கான்யூகிவினிற்கும் போந்தபோது முறையே ரூ. 547, ரூ. 651 கொண்ட பண முடிப்புகள் கொடுக்கப்பட்டன.

20-3-29 காலை காந்தியடிகள் இரங்கூன் வந்து சேர்ந்தார். பேஸினிலிருந்து வந்த பிரதிநிதிக் கூட்டமொன்று ரூ. 3000 அடங்கிய பணப்பை ஒன்றை அளித்தனர். அன்றைய பிற்பகலில் கூடிய கூட்டங்களில் மகாத்மாவுக்கு மோத் வகுப்பினர் ரூபா 1350-ம் குஜராத்தி ஸ்திரீகள் ரூ. 600 ம் வங்காள சங்கத்தார் ரூ. 501-ம் ஓர் உபசாரப் பத்திரமும் கொடுத்தனர். அனபா விபக்து சமாஜத்தாரால்ஸ்ரீமான் மகாதேவதேசாய்க்கு அளிக்கப்பட்ட பணப்பையும் காந்திஜியிடம் கொடுக்கப்பட்டது. முஸ்லீம் மாணவர்கள் காந்தி அடிகளுக்கு ஓர் உபசாரப்பத்திரம்வாசித்துத் தந்தனர். அப்போது அடிகள் இந்து முஸ்லீம் ஒற்றுமையின்றி இந்தியா சுயராஜ்யம் பெறல் அரிது என்று குறிப்பிட்டார். அதற்குப் பிறகு மகாத்மா மாலையில் தொழிலாளர்கள் மத்தியில் பேசும்போது, தொழிலாளர்கள் தாங்களும், தங்கள் குடும்பமும் இன்பமாய் வாழவேண்டுமானால், குடியையும், சூதாட்டத்தையும், ஏனைய தீப்பழக்கங்களையும் அறவே ஒழித்தல் வேண்டுமென்று வலியுறுத்திப் பேசினார். பிறகு அக்கூட்டத்தில் பணம் வசூலிக்கப்பட்டது. இத்துடன் மகாத்மாவின் பர்மா பிரயாணம் முடிவுற்றது.

21-3-29 பிற்பகல் காந்தியடிகளும், அவர் சகாக்களும் கல்கத்தாவுக்குக் கப்பலில் பிரயாணமானார்கள்.

பர்மாநாட்டில் காந்தியடிகளுக்கு வசூலான மொத்தத்தொகை ரூ 1, 55,000.

### கல்கத்தாவில் மகாத்மாவின் சொற்பொழிவு

மகாத்மா காந்தி, தமது பர்மா பிரயாணத்தை முடித்துக்கொண்டு 24-3.29 ல் கல்கத்தா வந்து சேர்ந்தார். அன்று ஹாலிடே மைதானத்தில் கூடிய ஒரு பொதுக்கூட்டத்தில் அடிகளார் ஓர் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார். கூட்டத்தில் வந்திருந்தவர், அந்நியத் துணிகளைச் சுட்டெரிக்கும் பொருட்டுக் கொடுக்கவேண்டு மென்று மகாத்மா விரும்ப, சுமார் பத்து நிமிஷம் வரை, அந்நியத்துணிகள் அவரருகே வந்து விழுந்த வண்ணமாயிருந்தன. பாபு சுபாஷ் சந்திர போஸ் தலைமையின்கீழ், காந்தியடிகள் நிகழ்த்திய சொற்பெருக்கின் சாரம் வருமாறு:—

பேச்சில் வீரம் காட்டவேண்டிய காலம் போய் விட்டது; செய்கையில் நாம் முனைந்து நிற்க வேண்டிய காலம் தொடங்கி யிருக்கிறது. இன்று மாலை, செய்கையில் நாம் முனைந்து நிற்கிறோமென்பதற்கு உதாரணமாக இந்தக்கூட்டத்தில் நாம் கூடியிருக்கிறோம். நம்மிடத்திலுள்ள ஓர் அங்குல அந்நியத்துணியையும் நாம் கழற்றி எறிய வேண்டு மென்பதே, நாம் இப்பொழுது முனைந்திருக்கும் செய்கையாகும். நாம் இப்பொழுது எரிக்கப்போகும் அந்நியத்துணிகள், பொதுஸ்தல மல்லாத ஓரிடத்திலேயே எரிக்கப்படும். இந்த ஏற்பாட்டில், சிறிது வியாபார முறையும் அடங்கியிருக்கிறது. அந்நியத்துணிகள் எரிக்கப்படும் இந்தக்காட்சிக்கு வரவிரும்புவோர், ஏதேனும் ஓர் அந்நியத்துணியைச்சுட்டெரிப்பதற்குக் கொடுக்கவேண்டு மென்று ஒருநிபந்தனை விதிக்கப் பட்டிருக்கிறது.

நான் இந்த அந்நியத்துணிக் குவியலுக்கு நெருப்பு வைத்துவிட்டுச்சென்ற பிறகு, இஃது எரிந்துகொண்டிருக்கும்படியே நீங்கள் செய்வீர்களென்று நம்புகிறேன். மிர்ஸாபூர் பார்க்கில், அன்று, கொளுத்தப்பட்ட தீயானது, இந்தியாவின் எந்த மூலையிலாவது ஓர் அங்குல அந்நியத்துணி இருக்கும் வரை எரிந்து கொண்டிருக்கு மென்று நம்புகிறேன். சமீப காலம் வரை, தனக்கு வேண்டிய துணிகளைத்தானே நெய்து கொண்டது மன்றி, உலகத்தாருக்கு மிகநயமான துணிகளை அனுப்பி வந்த ஒரு தேசத்திற்கு இது ஒரு பெரிய கடினமான செயலன்று. முற்காலத்தைப் போலவே, லட்சக்கணக்கான கிராமங்கள் இந்தியாவில் இன்னும் இருந்து கொண்டிருக்கின்றன. நெசவுத்தொழிலாளர்களுடைய கைசாமர்த்தியம் இன்னும் சாகவில்லை. ஆனால், நகரத்திலே வாழும் மாந்தராகிய நமக்கு, போதிய மனோதிடம் இல்லை; தங்களுடைய குடிசைகளிலே, எவ்வித பக்தமுமின்றி அமர்ந்து, நமது ஏழைச் சகோதரிகள் தயாரிக்கும் துணிகளை அணிந்து கொள்ள வேண்டு மென்ற ஆவல் நமக்கு இல்லை. இந்தச்சகோதரிகள் விஷயத்தில், நாம் சரியாக நடந்து கொண்டிருப்போமானால், அந்நியத்துணிகளை எரிக்க வேண்டிய சந்தர்ப்பமே ஏற்பட்டிராது. நமது நிலையை உத்தேசித்து இந்த அந்நியத்துணி தகனம் அவசியமாக வேண்டியிருக்கிறது.

### பாவத்தின் அறிகுறி

நன்னோக்கம் கொண்ட சில நண்பர்கள், அந்நியத்துணிகளைச் சுட்டெரிப்பதைத் தாங்கள் அங்கீகரிக்க முடியாதென்றும், இதனின்றும் என்னை விலகி விடும்படியும் கூறுகிறார்கள். அவர்களுடைய வாதங்களுக்கெல்லாம் மதிப்புக் கொடுத்து ஆலோசித்துப் பார்த்தபோதிலும், எனக்குச் சமாதானம் உண்டாகவில்லை. அந்நியத் துணிகளை வைத்துக் கொண்டிருப்பது தேசிய பாவத்தின் அறிகுறி யென்றே நான் கொள்கிறேன். இந்தப் பாவத்தினின்று நாம் எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரமாக விடுதலையடைகிறோமோ அவ்வளவுக் கவ்வளவு நல்லதே. ஆதலின் இதோ என் னெதிரே குவிந்து கிடக்கும் விலை யுயர்ந்த புடவைகள் முதலியவைகளைச் சுட்டெரிப்பதில் நான் மகிழ்ச்சியே கொள்கிறேன். இந்தத் துணிகள் நமக்குப் பெருஞ் சுமைகளாகும்; நமது அடிமைத் தனத்தின் சின்னமாகும். இவைகளை நாம் அணிந்து கொண்டிருக்கும் வரை, சுயராஜ்ஜியம் என்பது பகற்கனவே யாகும்.

இந்தியா முழுவதும் உள்ள ஜனங்களுக்கு இனாமாகவே, அந்நியத்துணிகள் சப்ளை செய்யப்படும் என்று கூறினாலும், அந்நியத்துணிகள் கிராக்கி யுள்ளனவாகும். இனாமாக அளிக்கப்படும் என்ற நிபந்தனையை நாம் ஏற்றுக் கொண்டோமானால் நாம் பெரிய அறிவிலிகளென்றே கருதப்படுவோம். கதரோ, எல்லா அம்சங்களிலும் நயமானது. அந்நியத்துணிகளை விலக்கி, கதர்த்துணிகளை உபயோகித்துக் கொள்ளும் குடும்பங்களில், இப்பொழுது எத்தகைய மாறுதல் ஏற்பட்டிருக்கிற தென்பதை நான் அறிவேன். கதர் தரிப்பதனால், மற்றப் பொருள்களின் மீதுள்ள சுவையும் மாறிவிடுகிறது. கிராமவாசிகளின் தொடர்பு ஏற்படுகிறது. கடைசியில், கதர், கிராக்கியான பொருளல்லஎன்று உபயோகித்தவர்கள் கண்டு கொள்கிறார்கள். உங்களுக்குச் சமாதானங்கள் சொல்லி, காலத்தைக் கழிக்க வேண்டு மென்பது என் உத்தேசமல்ல. அந்நியத் துணிகளை விலக்கிவிட வேண்டிய அவசியத்தை நீங்கள் இன்னும் உணரவில்லை யானால், நான் பேசியும் என்ன பயன்?

### "அடிமைச் சின்னம்"

கதர்த் துணிகள், மிகப் பளுவா யிருக்கின்றன வென்று கூறுகிறீர்கள். அடிமைப்பக்தம் எல்லாவற்றையும் விட பாரமுள்ளது; இந்த அந்நியத் துணிகள், அடிமைச் சின்னங்களாதலின், இவைகளை அணிந்துகொள்வது மிகப் பளுவாகவேயிருக்கும். ஐந்து கெஜம் கதர் அணிந்து கொள்வது மிகப் பளுவாயிருக்கிற தென்று உங்களுக்குத் தோன்றினால், அதை இரண்டரை கஜமாகக் குறைத்துக் கொள்ளுங்கள். ஐம்பது அல்லது நாற்பத்தைந்து அங்குலம் அகலமுள்ள துணிகள் பளுவா யிருக்கின்றன வென்று தோன்றினால் அதைப் பாதியாகக் குறைத்துக் கொள்ளுங்கள். இந்தியாவில் அதிகமான துணிகள் அணியாமலிருந்தாலும், வெறுங் காலராய் நடந்தாலும் எவரும் கேட்கப் போவதில்லை. முற்காலத்தில், ஒரு மனிதனுடையபெருமை அவனுடைய அந்தரங்கத்தைப் பொறுத்ததாயிருந்ததன்றிப் பகிரங்கத்தைப் பொறுத்ததாயிருக்கவில்லை. நாம் அந்தரங்கத்தைச் சுத்தமாக வைத்துக்கொண்டோமானால், நமது அவயவங்களுக்கு எந்த உடையை அணிந்து கொண்டிருந்தாலும் அதைப் பற்றிக் கவலை என்ன? இதைத் தவிர, நமது தேகத்திற்கு வேறு அணிகள் அணிந்துகொள்ள வேண்டிய அவசியம் இந்த விசாலமான நாட்டில் இல்லை. சீதோஷ்ண ஸ்திதி மிகக் கெடுதலானதென்றும், சரியான ஆடைகள் அணியா விட்டால் பலஹீனம் ஏற்பட்டு விடுமென்றும் கூறப்படுவதை யெல்லாம் கவனியாதீர்கள். நமக்குள்ளே யிருக்கும் ஆத்ம உணர்ச்சி தான் பலஹீனமா யிருக்கிறது. சீதோஷ்ண ஸ்திதி நம்மை பலஹீனப் படுத்தி விடவில்லை. அந்நியத் துணிகளை அணிந்து கொண்டிருக்கும் மனிதனுக்குத்தளர்ச்சியே உண்டாகு மென்பதில் ஐயமில்லை. இந்தியாவில் அழகான சூரியன் உங்கள் மீது பிரகாசிக்கிறான். மேனாட்டார் கொழுப்பான ஆகாரங்களையும் காட்லிவர் எண்ணெயையும் சாப்பிட்டு எந்தத்தேக பலத்தை அடையவேண்டுமென்று விரும்புகிறார்களோ அந்தத் தேகபலத்தை இந்தியாவில் சூரியனே அளிக்கிறான். இது விஷயமாக, நீங்கள் எந்தவைத்தியனை வேண்டுமானாலும் கேளுங்கள். நான் கூறுவதையே கூறுவார்கள். இந்தக் கூட்டத்தில் அந்நியத்துணிகளைக் கொடாதவர்கள் இன்னும் யாராவது இருந்தால் அவர்கள் இன்னும் ஐந்து நிமிஷத்திற்குள் அதையெல்லாம் எறிந்து விடுங்கள். உங்களுடைய பெட்டிகளில் ஏதேனும் அந்நியத்துணிகளிருந்தால் அவைகளையும் நாளை காலைக்குள் இந்தத் திக்குவியலுள் கொண்டுவந்து சேர்த்து விடுங்கள்.

### சென்னை மாகாணச் சுருக்கெழுத்துச் சங்கம்.

இச்சங்கத்தின் 18-ம் ஆண்டு விழா திருவல்லிக்கேணி சிங்காரச் சாரியார் மண்டபத்தில் 25-3-29-ல் சர் பி. எஸ். சிவஸ்வாமி அய்யர் தலைமையின்கீழ் நடைபெற்றது. அது போது சங்கச் சார்பாகவும் அரசாங்க சார்பாகவும் நடைபெற்ற சுருக்கெழுத்துப் பரீட்சைகளில் தேறியவர்களுக்குப் பதக்கங்களும் நற்சாட்சிப் பத்திரங்களும் கொடுக்கப்பட்டன. இவ்வாண்டு விழாவிற்கு வர இயலாத பல கனவான்கள் அனுப்பிய செய்திகள் வாசிக்கப் பட்டன. அவர்களுள் ஒருவரான ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் விடுத்த செய்தி வருமாறு:—

ஸ்ரீமான் R. கணேசய்யர் அவர்கள்,

தலைவர், சுருக்கெழுத்துச் சங்கம்,

சென்னை.

அன்புகெழுமிய ஐய,

அழைப்பு வரப்பெற்றேன். இன்று வேறோரிடம் போந்து பேச ஒருப்பட்டமையான், சுருக்கெழுத்துக் கூட்ட விழாவிற்குப் போதா இயலாமை குறித்து வருந்துகிறேன்.

தமிழ்ச் சுருக்கெழுத்து வளர்ச்சிக்குத் தாங்கள் முயன்று வருவது போற்றற்குரியது. அம்முயற்சி வெற்றிபெறுவதாக.

தமிழ்ச் சுருக்கெழுத்து முறை காணப்பட்டுப் பல ஆண்டுகளாகியும், அது தமிழுலகிற்குப் பயன்படாதிருத்தல் வருந்தத் தக்கதே. தமிழில் வாய்மொழியாகப் பேசப்படுவது, பத்திரிகைகளில் பெரிதும் ஒழுங்காக வருவதில்லை. சில சமயங்களில் பேசுவோர் கருத்துக்கு முற்றும் மாறுபட்ட பொருள்களும் பத்திரிகைகளில் வெளியாகின்றன. நிருபர்கள் தமிழ்ச் சுருக்கெழுத்துப் பயிர்சி பெற்றிருப்பின், எவ்வித திரிபுகட்கும் இடன் நேராது. அப்பயிற்சி பொதுவாகப் பலரும், சிறப்பாகப் பத்திரிகை நிருபர்களும் பெறுவதால் தமிழுலகிற்கு நலனுண்டு என்று சொல்லவேண்டுவதில்லை.

தங்கள் சங்கச் சார்பாக நடைபெறப் போகும் தமிழ்ச் சுருக்கெழுத்து வகுப்புக்கு "நவசக்தி" நிலையத்தினின்றுஞ் சில இளைஞர்களை அனுப்ப விரும்புகிறேன்.

சங்க நலன்கருதித் திருவருளை வழுத்தும்,

திரு. வி. கலியாணசுந்தரன்,

இராயப்பேட்டை,

25-9-29.

சென்னை, ஜியார்ஜ் டவுன் போலீஸ் கோர்ட்டில், சின்னசாமி என்னும் 50 வயதுள்ள ஒருவர் சப்இன்ஸ்பெக்டர் கஸ்தூரிரங்க ஐயங்கார் குழந்தையினுடைய பொன் அரை முடியைத் திருடியதற்காக மூன்றுமாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார்.

என்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.—(அப்பர்.)

சென்னை 1929ஹு மார்ச்சுமீ 27௳

## அடக்கு முறை

உலகில் எப்பாங்கரினும் சுதந்திரமென்றும், சமத்துவ மென்றும், சகோதர நேயமென்றும் பேசப்படுகின்றன. அப் பேச்சுக்குரிய மகாநாடுகளும் ஆங்காங்கே கூடுகின்றன. ஆனால் நாம் பிறந்த இந்தியாவிலோ? நினைக்கவும் நெஞ்சங் குழைகிறது.

இந்தியாவில் சின்னாளாக அடக்கு முறைத் தென்றல் மிக அமைதியாக வீசிக்கொண் டிருந்தது. இப்பொழுது அத்தென்றல் முற்றி வாடையாக மாறியிருக்கிறது. அவ்வாடை பெரும் புயலாகுமோ என்னவோ தெரியவில்லை.

இப்பொழுது வட இந்தியாவில் அடக்குமுறை தாண்டவம்புரியத் தொடங்கி யிருக்கிறது. அவ்வடக்கு முறையின் நடைமுறையை நோக்குழி அது திடீரென எழுந்ததென்று சொல்ல முடியாது. அதற்கெனப் பன்னெடுநாள் செலவழிக்கப்பட் டிருத்தல் வேண்டுமென்று எவருங்கூறுவர். ஒரேகாலத்தில் பல மாகாணங்களில் சோதனைகளும், கைது செய்தலும், வழக்குக்கென ஓர் ஐரோப்பிய பாரிஸ்டர் நியமனமும் நிகழ்ந்திருத்தலை நேயர்கள் ஊன்றிக் கவனிப்பார்களாக. வழக்கு மீரட்டில் நடைபெறுமென்று அறிவிக்கப் பட்டிருக்கிறது. வழக்கு நியாயமன்ற மேறும் நிலையிலிருத்தலால், அதைப்பற்றி நாம் இப்பொழுது ஒன்றுங் கூறப் போவதில்லை.

அரசாங்கத்தார் செயலைப்பற்றி அறவழியில் இந்திய சட்டசபையில் வாதப்போர் நிகழ்த்தப் பண்டித மோதிலால் நேரு விரும்பினர். அவ்விருப்பத்துக்குச் சபைத் தலைவரும் இணங்கினர். இராஜப்பிரதிநிதி தமக்குள்ள அதிகாரத்தைக் கொண்டு, குறுக்கிட்டு, பண்டிதர் முயற்சியைப் பாழ்படுத்தி விட்டார். நியாயமன்ற வழக்கைப்பற்றி ஒன்றும் பேசாது வாதஞ் செய்வதாகப் பண்டித நேரு வாக்குறுதி செய்ததையும் இராஜப்பிரதிநிதி பொருட்படுத்தினாரில்லை. இதைப்பற்றி விரிவுரைகூறவும் வேண்டுமோ?

இந்தியாவில் புரட்சி இயக்கம் ஒன்றிருப்பதாகச் சொல்லப்படுவது கனவுலகினின்றெழும் ஒரு புனைவேயாகும். இந்திய மக்கள் புரட்சி நிகழ்த்த எண்ணியிருப்பரேல்,ஒரு நூற்றாண்டுகளுக்கு முன்னரே நிகழ்த்தி யிருப்பார்கள். அவ்வெண்ணம் இந்தியர்கட் கில்லை என்பது வெள்ளிடைமலை. அரசாங்கத்தார் வீண் கனவு கண்டு இடர்ப்படுகிறார். அமைதியில் பேர் பெற்ற இந்தியாவில் அடிக்கடி அடக்குமுறை யெழுதற்குக் காரண மில்லை.

இந்திய மக்களின் தற்கால நிலை அரசாங்கத்துக்குத் தெரிந்திருக்கு மென்பதில் ஐயமில்லை. இந்திய மக்கள் தங்களுக்குள் சாதிப் பூசல் சமயப் பூசல் முதலியவற்றை நிகழ்த்திக் கொள்ளல் அரசாங்கத்துக்குத் தெரிந்ததொன்றே. இந்தியாவில் பிறந்தவர்களில் "சுய ஆட்சி வேண்டாம்; அந்நிய ஆட்சியே வேண்டும்" என்று சொல்வோ ரிருக்கிறார்; "தேசபக்தி வேண்டாம்" என்று சொல்வோ ரிருக்கிறார்; "நாட்டு மொழி வேண்டாம்; நாட்டுக்கலை வேண்டாம்" என்று சொல்வோருமிருக்கிறார். இப்பிள்ளைகளை ஈன்ற பாரதத்தாயின் உள்ளத்தில்புரட்சி எண்ணத்தளவிலாதல் உறுங்கொல்!

காங்கரஸ் இயக்கம் உரிமை வேட்கையை எழுப்புவதே யாகும். ஆனால் அவ்வியக்கம் மற வழியில் புரட்சியை அறிவுறுத்துவதன்று என்பது அரசாங்கத்தார்க்கு நன்கு தெரியும். அவ்வியக்கம் ஏறக்குறைய பத்தாண்டுகளாக மகாத்மாகாந்தி வயப்பட்டுக் கிடக்கிறது. காந்தியடிகள் கொள்கை எத்தகைத்து என்பதை நாம் புதிதாக ஈண்டுக் குறிப்பிட வேண்டுவதில்லை.

இந்தியத் தொழிலாளர் இயக்கமும் இன்னுங் கனிதரும் மரமாகவில்லை. இப்பொழுதுதான் அவ்வியக்கம் முளைவிட்டிருக்கிறதென்று கூறலாம். இந்தியத் தொழிலாளர்கள் எக்காரணம் பற்றியும் புரட்சி இயக்கங்களில் தலைப்பட மாட்டார்கள். அவர்கட்கு வேண்டுவது உணவு, உடை முதலியன. அவைகள் அவர்கட்குப் போதிய அளவு வழங்கப்படின் அவர்கள் ஆனந்தவாரிதியில் திளைத்து விடுவார்கள். தொழிலாளர் வேலை நிறுத்தத்துக்குக் காரணம் "வறுமைப் பிணி" என்பதை நாம் நன்கு அறிவோம். அப்பிணி தீர்க்க அவர்கள் நிகழ்த்தும் வேலை நிறுத்தம் கொலைப் புரட்சியாகாது.

இளைஞர்கள் நிலையைப்பற்றி விரித்துரைக்க வேண்டுவதில்லை. இந்திய இளைஞர்கள் உள்ளத்தில் தேசபக்தி பொங்கிக் கொண்டிருப்பின், சைமன் பம்பாய்த் துறையினின்றுந் திரும்பிப் போயிருப்பர். இந்திய இளைஞர்கள் மகாநாடுகள் கூட்டுவதிலும், அழகிய ஆங்கிலச் சொற்பொழிவுகளைக் கேட்பதிலும் பெரிதுங்கவலைசெலுத்துகிறார்கள். அவர்கள் சுதேசியத்தில் பெரிதுங் கவலை செலுத்துவதில்லை. திடீரென ஒரு கல்லூரிக்குள் நுழைந்து மாணாக்கர்களின் உடையை நோக்கினால், அவர்களின் சுதேசியப் பற்றுப் புலனாகிவிடும். ஆகவே இளைஞர்கள் இயக்கத்தாலும் இரத்தப் புரட்சிக்கு இடனில்லை.

இத்தகையஇந்தியாவில்அடக்குமுறை எற்றுக்கு? அவ்வடக்கு முறைக்கெனக் காலச் செலவும் பணச் செலவும் எற்றுக்கு? ஏழை இந்தியாவின் பணம் "கமிஷன்" கட்டும், "பாரிஸ்டர்" கட்டும் ஏன் தொலைதல் வேண்டும்?

ஏதோ ஒரு போலிச் சீர்திருத்தம் இந்தியாவிற்கு வழங்குவதற்குள், இந்தியாவை அடக்கு முறையால் அச்சுறுத்தல் வேண்டும் போலும்! சீர்திருத்தம்வழங்குதற்குமுன்னர்அடக்கு முறையைக் கையாளுதல் ஒரு சம்பிரதாயமாகிவிட்டது போலும்! இந்தியாவில் அதிகார வர்க்க ஆட்சி முறையுள்ளவரை இத்தகை அடக்கு முறைகள் நிகழ்தல் இயல்பு.

நாம் என் செயல் வேண்டும்? முதலாவது காங்கரஸை வலுப்படுத்தல் வேண்டும். காங்கரஸைப் பற்றிக் குறைகூறுவந்தத் தேசத்தார் மறந்துவிடல் வேண்டும். காங்கரஸ் என்பது ஓர் அமைப்பு. அவ்வமைப்பை அவ்வப்போது நடாத்து வோரிடைச் சில வேளைகளில் தவறுதல் நிகழ்ந்துவிடும். அத் தவறுதலையே என்றும் பாராட்டிக் கொண்டிருப்பது நாட்டு நலனை நாடுவதாகாது. தவறுதலைத் திருத்தி அமைப்பை ஒழுங்குபெற நடாத்துவதே அறிவுடைமை. காங்கரஸைக் குறைகூறுவது அதிகாரவர்க்கத்துக்கு ஆக்கந் தேடுவதாகும். இதனை நாட்டிற் பிறந்தவர்கள் உணர்ந்து நடத்தல் வேண்டும். எல்லா இயக்கங்களும் காங்கரஸில் ஒன்றும் முறையில் தேசபக்தர்கள் உழைத்தல் வேண்டும். தேசத்தைப்பற்றிய விடயங்களில் பிறவற்றைக்கொணர்ந்துநுழைத்தலாகாது. இன்னோரன்ன முறைகளைத் தேசத்தார் கைக்கொள்வாராக.

தற்போது இந்தியாவில் எழுந்துள்ள அடக்குமுறைக்கு நேரிய வழியில் பதிலிறுக்கலாம். அஃதென்னை? இந்திய மக்கள் எல்லோரும், சுதேசியத்தில் பற்றுக்கொண்டு, கதராணிய உறுதிகொள்வதாகும். இதைச் செய்யாது வீண்கூச்சலிடுவதால் பயன்விளையாது. அமைதியும், தேசபக்தியும், சுதேசியப்பற்றும் வேண்டற்பாலன.

## இடியேறு

### சைமன் குழுவும் போலீஸ் செலவும்

சென்னைக்குச் சைமன்குழுவினர் வந்திருந்தகாலை, போலீஸ் பந்தோபஸ்திற்காக 51,600 ரூபாய் செலவழிக்கப் பட்டதாக அரசாங்க அறிக்கை யொன்றினால் தெரியவருகிறது. இதைப்பற்றி வாதம்செய்ய, பிற நடவடிக்கைகளைத் தள்ளிவைக்க வேண்டுமென்று சென்னைச் சட்ட சபையில் கொண்டுவரப்பட்ட அவசரப் பிரேரணையை, தலைவர் நிராகரித்துவிட்டார். மேற்படி செலவுக்குக் காரணம் ஜனங்களில் ஒருசாரார் நடந்துகொண்ட மாதிரியே என்று அரசாங்க அறிக்கையில் ஒரு வாக்கியம் காணப்படுகிறது. இது பகிஷ்காரக்காரரையே குறிக்கிறதென்பது வெள்ளிடைமலை. இது பெரிதும் கண்டிக்கத்தக்கது. பகிஷ்காரக்காரர் எவ்வித பலாத்காரமும் அன்று செய்யவில்லை; அரசாங்கத்தாரும், சட்டசபையில் பகிஷ்காரக்காரர்மீது எவ்விதக் குற்றங்களையும் சுமத்தவில்லை. இவ்வளவு அதிக செலவுக்கு ஒருவித காரணங்காட்ட வேண்டுமென்பதற்காக பகிஷ்காரக்காரர்மீது குறை கூறப்படுகிறதா? தற்போதைய சென்னை அரசாங்கத்தின் மனப்பான்மை விநோதமாயிருக்கிறது!

### காலெட் வழக்கு

சென்னையில் சில மாதங்களுக்குமுன் ஸ்ரீமான் காலெட் என்ற ஓர் ஐரோப்பியர் தமது மோடாரை மிக வேகமாக ஓட்டியதன் பயனாகச் சிலர் உயிர்துறந்தனர் என்பது நேயர்களுக்குத் தெரியும். இவர், பிரசிடென்சி மாஜிஸ்ட்ரேட்டால் விசாரிக்கப்பட்டு தண்டனை பெற்றார். ஸ்ரீமான் காலெட், சென்னை உயர்தர நீதி மன்றத்துக்கு அப்பீல் செய்து கொண்டார். நீதிபதிகளான வாலரும் அனந்த கிருஷ்ணையரும் இவருக்கு ஒன்றரை வருஷங் கடுங்காவல் தண்டனை விதித்தனர். இதுசம்பந்தமாக நீதிபதிகள் கூறியதீர்ப்பில், கீழ்க்கோர்ட்டு விசாரணையில், பிரதம பிரசிடென்ஸி மாஜிஸ்ட்ரேட் கொடுத்திருக்கும் சாட்சியத்தைப் பற்றிக் கண்டித்தெழுதப்பட் டிருந்தது. இந்த விஷயத்தைப்பற்றி ஆலோசிக்க, சபையின் நடவடிக்கைகளைத் தள்ளி வைக்கவேண்டுமென்று, சென்னைச் சட்டசபையில் ஸ்ரீமான் சத்தியமூர்த்தி கொண்டுவந்த பிரேரணையைத் தலைவர் அங்கீகரித்திருந்தும், கவர்னர், தமது விசேஷ அதிகாரத்தைக் கொண்டு, நிராகரித்துவிட்டார். இந்தப் பிரேரணை, பொதுஜன நன்மையைப் பாதிப்பதாகாது. கவர்னர், இவ்விஷயத்தில், தமது விசேஷ அதிகாரத்தைச் செலுத்தியது ஆச்சரியமா யிருக்கிறது. சட்டசபை அங்கத்தினர்களுக்குள்ள சாதாரண உரிமையிலும், இது தலையிடுவதாக இருக்கிறதென்று மட்டும் இப்பொழுது கூறுவோம்.

## மகாத்மா காந்தியின் வழக்கு

### அடிகளாரின் வாக்குமூலம்

#### ஒரு ரூபாய் அபராதம்

மகாத்மா காந்தியின் வழக்கு கல்கத்தா பிரதம மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் 26-3-29 காலை சரியாக பத்து மணிக்குத் தொடங்கப் பட்டது. பத்துமணிக்கு முன்னரே, கோர்ட் சுற்றிலுமுள்ள தெருக்களில் ஏராளமான ஜனங்கள் நிரம்பி விட்டனர். கோர்ட் காம்பவுண்டுக்குள்ளும் மாஜிஸ்ட்ரேட் கோர்டுக்குள்ளும் பிரவேசச் சீட்டின்றி எவரும் அநுமதிக்கப்படுவதில்லை யென்று ஏற்பாடு செய்திருந்தபோதிலும் ஏராளமான வக்கீல்களும் பத்திரிகைப் பிரதிநிதிகளும் கோர்ட் மண்டபத்தில் நிரம்பி விட்டனர். சரியாக 9–55 மணிக்கு மகாத்மா காந்தி, பண்டித ஜவஹரிலால்நேரு, பாபு சுபாஷ்சந்திரபோஸ் இவர்களுடன் கோர்ட்டுக்கு வந்தார். உடனே "காந்திக்குஜே" "வந்தேமாதரம்" என்னும் சப்தம் வானைப் பிளந்தன. அடிகளார், கோர்ட் மண்டபத்தில் நுழைந்ததும், அங்கிருந்த வக்கீல்கள், போலீஸ் உத்தியோகஸ்தர்கள் முதலிய எல்லாரும் எழுந்து மரியாதை செய்தனர். அடிகளும், தமது புன்முறுவலால் பிரதி வந்தனத்தைத் தெரிவித்தார். மாஜிஸ்ட்ரேட் முன்னர், ஓர் ஆசனத்தில் இவர் அமர்ந்தார். இவ்வழக்கில் சம்பந்தப்பட்ட ஸ்ரீமான் கிரான் சங்காராயும் இவர் பக்கலில் வேறோர் ஆசனத்தில் அமர்ந்தார். சரியாக 10.5 மணிக்கு மாஜிஸ்ட்ரேட் தமது ஆசனத்தில் வந்தமர்ந்தார்.

காந்தியடிகளுக்காக ஸ்ரீமான் ஜே. எம். சென்குப்தா ஆஜரானார். அவருக்குத் துணையாக ஜே. சி. குப்தா முதலிய வக்கீல்கள் இருந்தார்கள். ஆரம்பத்தில் ஸ்ரீமான் ஜே. எம். சென்குப்தா பொதுத்தோட்டம் (பார்க்) பொதுஜனங்கள் நடமாடும் ஸ்தலமாகுமா வென்பதைப்பற்றிய வியாக்கியானத்தையே இந்த வழக்குப் பொறுத்திருக்கிறதென்று கூறினார்.

பப்ளிக் பிராசிகியூடரான ஸ்ரீமான் டி. என். சாது, பேசுகையில் "பார்க்" என்பது போலீஸ் சட்டத்தின் 66-வது பிரிவின்கீழ் வரும் என்றார்.

#### அடிகளின் வாக்குமூலம்

பிறகு காந்தியடிகள் தமது ஆசனத்திலிருந்துகொண்டே கீழ்க்கண்ட தமது வாக்குமூலத்தை மிகுந்த நிதானமாகவும் அழுத்தந்திருத்தமாகவும் படித்தார்:—

பொதுஜன வாழ்க்கையில் நான் வகிக்கும் ஸ்தானத்தை உத்தேசித்து இந்த வழக்கின் விஷயமாயுள்ள எனது நடத்தையைப் பற்றி கோர்ட்டாருக்குத் தெரிவிக்க வேண்டுவது எனது கடமை யென்று கருதுகிறேன். காங்கிரஸ் காரியக் கூட்டத்தினால் நியமிக்கப்பட்ட அந்நியத் துணி பகிஷ்காரக் கமிட்டியின் தலைமைப் பதவியை நான் வகிக்கிறேன். காரியக் கமிட்டியினால் அங்கீகரிக்கப்பட்ட திட்டத்தில் எங்கெங்கு முடியுமோ அங்கெல்லாம் அந்நியத் துணிகளை எரிக்க வேண்டுமென்ற அமிசமும் அடங்கியிருக்கிறது. எனவே, சிரத்தானந்தர் பார்க்கில் கூடிய பொதுக்கூட்டத்தில், அந்நியத் துணிகளைச் சேகரித்துக் கொளுத்த வேண்டுமென்று நான் கூறியது இயற்கையேயாகும். எனக்கும், என் சகாக்களுக்கும் போலீஸ் கமிஷனரால் வழங்கப்பட்ட அறிக்கையானது, கலவரத்தையே உண்டு பண்ணுவதாயிருந்தது. நெருப்பினால், சொத்துக்கள் சேதமாகாம லிருக்குமாறு காப்பாற்றவேண்டுமென்ற நோக்கத்துடன் அவ்வறிக்கை வழங்கப்பட்டதாகத் தெரியவில்லை; கூட்டத்தில் காணப்படும் உற்சாகத்தைத் தடுப்பதற்காகவே, வழங்கப் பட்டதாகத் தெரிகிறது. தனிப்பட்ட ஓரிடத்தில், இந்தத் தகனத்தை நாங்கள் நடத்தக்கூடும். ஆனால், பிரபலமான இரண்டு நியாய வாதிகள், போலீஸ் சட்டத்தின் 66-வது பிரிவு தவறாக இருக்கலாம் என்று கூறுகின்றனர். எனவே, ஏற்கனவே விளம்பரம் செய்திருந்தபடி பார்க்கில், அந்நியத் துணி தகனத்தை நடத்துவதென்றும், இது விஷயமாகப் போலீசார் செய்யும் வியாக்கியானத்தை நியாய ஸ்தலத்தில் பரீட்சித்துப் பார்ப்பதென்றும் தீர்மானித்தோம்.

#### சட்ட மறுப்பல்ல

இந்த அந்நியத்துணி பகிஷ்கார இயக்கம், சட்ட மறுப்பின் ஓர் அமிசமாகாது. சட்டத்தை மீற வேண்டும், சிறைக்குச்செல்ல வேண்டுமென்ற நோக்கத்துடன் போலீஸ் அறிக்கையை மறுக்க வேண்டுமென்ற எண்



ணம் எங்களுக்கில்லை. இதைப்பற்றித் தெளிவாகப் போலீஸார்கேட்கும்படி நான் கூட்டத்தில் கூறினேன். என் உபந்நியாசத்தின் போது, போலீஸ்டெபுடிகமிஷனர் பிரசன்னமாயிருந்தார் என்று நினைக்கிறேன். அப்படியிருக்கப், போலீஸார், திடீரென்று நெருப்புக் குவியலைச் சுற்றிக்கொண்டு, தாம் கொண்டுவந்த கழிகளால் கூட்டத்தினரைத் தாக்கி அதனைக்கலைத்து நெருப்பை அணைத்ததைப்பற்றி நான் ஆச்சரியப்படுகிறேன்; துக்கமடைகிறேன். பிறகு நடந்த துக்ககரமான காட்சியைப்பற்றி நான் இங்கே வருணிக்க வேண்டுவதில்லை. இதைப்பற்றிக் கோர்ட்டார் ஏதேனும் கேட்டால் தக்கபதிலளிக்கச் சித்தமாயிருக்கிறேன்.

நான் மேலேகூறிய வண்ணம், தெளிவாக எடுத்துரைத்திருந்த போதிலும் போலீஸார் சட்டத்தைமீறித் தவறாக நடந்து கொண்டார்கள். ஆகையால் அவர்கள் எனக்குப் பதில் குற்றவாளிகளாக வேண்டியவர்கள். நானும் என் சகாக்களும், வாதிகளாயிருக்க, போலீஸார் குற்றவாளிகளா யிருக்கவேண்டியவர்கள். சட்டங்களுக்குப் போலீஸார் செய்யும் வியாக்கியான விஷயத்தில் நான் அபிப்பிராயபேதங்கொண்டு, அவர்களுடைய உத்தரவுக்கு மாறாக நடக்கவேண்டிய அநுபவம் உலகத்தின் பிறபாகங்களில் எனக்கு இருக்கிறது. ஆனால் அவர்கள் உலகத்தின் பிறபாகத்தினர் கோர்ட்டுகளின் மூலமாகவே அபிப்பிராய வேற்றுமைகளைத் தீர்த்துக் கொண்டனர்; கோர்ட்டில் தீர்மானமாவதற்கு முன்னரேயே தாங்கள் ஒருவிதமான முடிவுக்கு வந்து சட்டத்தை மீறிய குற்றத்திற்குட்பட்டு, பொதுஜன அமைதிக்குப் பங்கம் விளைவிக்கவில்லை.

#### கூட்டம் அமைதியாயிருந்தது

அன்று கல்கத்தாவில் கூடிய கூட்டம் மிகுந்த அமைதியாக இருந்தது; கூட்டத்தினர் மிக ஒழுங்காக நடந்து கொண்டனர். அப்பொழுது அந்நியத் துணிகள் கொளுத்தப்பட்டதனால் சுற்றுமுற்றுமுள்ள சொத்துக்களுக்கு எவ்வித ஆபத்தும் இல்லை. அந்நியத் துணிகளை எரிப்பதற்காகத் தெரிந்தெடுக்கப்பட்ட இடம் ஒதுக்குப்புறமாகவும் நன்குபாதுகாக்கப்பட்டும் இருக்கிறது. ஆதலின், கூட்டத்தின் நடவடிக்கைகளில் தலையிடாமலிருப்பது போலீஸாரின் கடமையாயிருந்தது. அவர்கள் தலையீடு முரட்டுத்தனமானது; அநாவசியமானது. நெருப்பை அணைத்ததனால், கோர்ட்டார் செய்ய வேண்டிய வேலையைத் தாங்களேமேற்போட்டுக்கொண்ட குற்றத்திற் காளாகிறார்கள். என்னுடைய வாக்குமூலத்தில் உங்களுக்கு நம்பிக்கை யிருக்குமானால், என்னையும் என் சகாக்களையும், விடுதலை செய்து, போலீஸார் மீது தகுந்த நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். நான் எந்தப் பிரிவின்படி குற்றஞ்சாட்டப்பட்டிருக்கிறேனோ அந்தப் பிரிவுக்குக் கோர்ட்டார் செய்யும் வியாக்கியானத்திற்குச் சம்பந்தமில்லாமலே, என்னை விடுதலை செய்ய வேண்டுமென்று கேட்கிறேன்.

என்னுடைய சகாக்களில் மூன்று பேர், முதற்குற்றஞ் செய்தவர்கள் என்று குற்றஞ் சாட்டப்பட்டிருக்கிறார்கள். ஆனால், முதன் முதலாக நெருப்பை உண்டாக்கினவன் நானே? ஆதலின், நாங்கள் ஏதேனும் குற்றஞ் செய்திருப்பின், முதற்குற்றம் செய்தவன் நானே; மற்றவர்கள் எனக்குத் துணையாயிருந்தவர்களே.

#### சப் இன்ஸ்பெக்டரின் குறுக்கு விசாரணை

பிறகு ஜே. என். முகர்ஜி என்ற போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் ஸ்ரீமான் சென்குப்தாவினால் குறுக்கு விசாரணை செய்யப்பட்டார்.

ஸ்ரீமான் குப்தா கேட்ட கேள்விக்கு ஸ்ரீமான் முகர்ஜி பதிலளிக்கையில், தாம் கூட்டம் நடந்தவன்று, பார்க்கில் இருக்கும்படி உத்தரவிடப் பட்டதாகக் கூறினர்.

வினு:—நெருப்பு எரிந்துகொண்டிருக்கும்போதா, அல்லது அது பற்றி எரிந்த பிறகா, அதை அணைக்கும்படி உங்களுக்கு உத்தரவிடப்பட்டது?

விடை:—நான் அங்கே ஒன்றரை மணி நேரமாக இருந்தேன்.

வினு:—நெருப்பை அணைப்பதற்குத், தண்ணீர் என்ற ஒரு வஸ்து இருக்கிறதென்று உங்களுடைய உயர்ந்த உத்தியோகஸ்தர் உங்களுக்குத் தெரிவித்தாரா? (நகைப்பு)

விடை:—இல்லை.

வினு:—தடிகளைப் பற்றி ஏதேனும் கூறினாரா?

விடை:— ஆம். (மீண்டும் நகைப்பு.)

வினு:—கல்கத்தாவில் நெருப் பணைக்கும் படை யொன்று இருக்கிறதென்று உங்களுக்குத் தெரியுமா?

விடை:—ஆம்.

வினு:— நெருப்பணைக்கும் இயந்திரங்களில் ஒன்றை மேற்படி பார்க்கில் கொண்டு வந்து நிறுத்தி வைத்து வேண்டும்போது ஒரு குழாயைத் திருப்பி விடுவதைப்பற்றி நீங்களாவது, டிப்டிகமிஷனாவது யோசனை செய்தீர்களா?

விடை:—இல்லை.

வினு:—மேற்படி பார்க்கிலேயே, முனிசிபாலிடி குழாய் ஒன்று இருக்கிறதென்று உங்களுக்குத் தெரியுமா?

கோர்ட்:—இந்தக் கேள்வி ஒழுங்காகுமா?

ஸ்ரீமான் சேன்குப்தா:—தண்ணீர் அருகே அகப்படும்போது, தடிகளைக் கொண்டு எவரும் நெருப்பை அணைக்க மாட்டார்கள். சட்டப்படி எவ்விதக் குற்றமும் செய்யப்படவில்லை யென்பதும், சட்டத்தைத் துஷ்பிரயோகம் செய்திருக்கின்றன ரென்பதும், இந்தச் செய்கைக்கு அரசியல் நோக்கமே காரணமென்பதும் என் வாதமாகும்.

வினு:—காமன்ஸ் சபையில் லார்ட் விண்டர்டன் கூறியது உங்களுக்குத் தெரியுமா?

கோர்ட்டார்:—இந்தக் கேள்வி அநாவசியம்.

ஸ்ரீமான் சேன்குப்தா:—இந்த வழக்குத் தொடுப்பதற்கு முக்கிய காரணம் அரசியல் நோக்கமே தவிர வேறொன்றுமில்லை. இந்த வழக்குக்குப் பத்துநாட்களுக்கு முன்னர், அந்நியத்துணி பகிஷ்கார சம்பந்தமாகத் தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றனவென்று லார்ட் விண்டர்டன் கூறியிருக்கிறார்.

பப்ளிக் பிராசிகியூடர்:— இதற்குத் தகுந்த ஆதாரம் இல்லை.

ஸ்ரீமான் சேனகுப்தா:—(சப் இன்ஸ்பெக்டரைப் பார்த்து) 1921-ம் வருஷத்தில் எல்லாப் பெரிய தோட்டங்களிலும் அந்நியத் துணிகள் கொளுத்தப்பட்டனவென்பது உங்களுக்குத் தெரியுமா?

விடை:—கேள்விப்பட்டிருக்கிறேன்.

வினு:—போலீஸ் சட்டத்தின் 66-வது பிரிவு பிரயோகிக்கப்பட்டது இதுதானே முதன் முறை.

விடை:—ஆம்.

பிறகு வாதம் நடைபெற்றது. எல்லாம் 12–20 மணிக்குள் முடிந்துவிட்டது. 12–25 மணிக்குக் காந்தியடிகள், கூட்டத்தாரின் ஆரவாரத்துக் கிடையே சென்று விட்டார்.

வழக்கு நடைபெற்றுக் கொண் டிருக்கையில், வெளியே இருந்த ஜனங்கள் பெரிய ஆரவாரம் செய்துகொண் டிருந்தனர். போலீஸாரால் அடக்க முடியவில்லை. உடனே ஸ்ரீமான் சுபாஷ் சந்திரபோஸ் வெளியே வந்து அமைதியா யிருக்கும்படி கூட்டத்தினரை வேண்டிக் கொண்டார். பிறகு எல்லாரும் அமைதியாக உட்கார்ந்து விட்டார்கள். போலீஸ் ஏற்பாடுகள் பலமாயிருந்தது.

### வழக்கு முடிவு

#### ஒரு ரூபாய் அபராதம்

அந்நிய நாட்டு ஆடைகளை நடுத்தெருவில் கொளுத்தியதற்காகக் குற்றஞ் சாட்டப்பட்ட மகாத்மாகாந்தி, கே. எஸ். ராய் முதலியவர்களின் வழக்கில், கல்கத்தா சீப்பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட், மேற்கூறிய ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு ரூபா அபராதம் விதித்தார். இது விஷயமாக, கல்கத்தா ஹைகோர்ட்டில் மனுசெய்து கொள்ளப்படுமென்று தெரிகிறது.

### மந்திரிப்பதவிக்கு விண்ணப்பம்

வங்காள மாகாணச் சட்டசபையில், மந்திரிமார்கள் இனி நியமிக்கப்பட்டால் அவர்களுக்குச் சம்பளம் கொடுக்கப்பட வேண்டுமென்று ஒரு பிரேரணை கொண்டுவரப்பட்டது. இதை எதிர்த்து, சம்பளம் கொடுக்க முடியாது என்ற திருத்தப் பிரேரணை ஒன்று சுயராஜ்யக் கட்சியார் கொண்டு வந்தார். இத்திருத்தப் பிரேரணை தோல்வியுற்றது. இதற்குப் பிறகு, சட்டசபை மண்டபத்திற்கு வெளியே ஓர் அறிக்கை ஒட்டப்பட்டிருந்தது. மந்திரிப்பதவி காலியா யிருக்கிறதென்றும், வேண்டுவோர் கவர்னருக்கு விண்ணப்பங்கள் அனுப்பிக் கொள்ளலாமென்றும், தங்களுடைய யோக்கியதைகளையும், அத்தாட்சிப் பத்திரங்களையும் விண்ணப்பத்தில் குறிப்பிட வேண்டுமென்றும், ஐரோப்பியக் கட்சியினரிடமிருந்து சிபார்சுக் கடிதங்களுடன் விண்ணப்பங்கள் அனுப்பப்பட வேண்டுமென்றும், மேற்படி அறிக்கையில் காணப்பட்டிருந்தன.

## சட்டசபைத் திருவிளையாடல்

### சில பொறுக்கு மணிகள்

இந்தியாவிலுள்ள எல்லா மாகாணச் சட்ட சபைகளிலும், இந்தியா சட்ட சபை, இராஜாங்க சபை இவைகளிலும் தற்போது வரவு செலவுத்திட்டங்களைப் பற்றி வாதம் நடைபெற்று வருகிறது. அதனின்றும், ருசிகரமான சில விஷயங்களை மட்டும் ஈண்டுப் பொறுக்கித் தருகிறோம்:—

#### சென்னைச் சட்டசபை

ஸ்ரீமான் காளேசுவரராவ் (நீதி நிருவாகத்தைப் பற்றி வாதம் நடைபெற்ற போது) சென்னை ஹைகோர்ட்டின் பிரதம நீதிபதி மிகுந்த நோயா யிருக்கிறார். இதனால் இவருக்கு அடிக்கடி கோபம் உண்டாகிறது. * * * பிரதம நீதிபதி, பெஞ்சு கிளர்க்கினால் தூக்கிவிடப்பட வேண்டியவரா யிருக்கிறாரென்றும் டபேதாரின் துணைகொண்டே படிக்கட்டு ஏறவேண்டியவரா யிருக்கிறாரென்றும், தகுந்த வைத்தியர்கள், அவரைப் பரிசோதனை செய்து போதிய ஓய்வு கொடுப்பது அவசியமானால் அப்படியே கொடுக்க வேண்டும் என்றும் நான் கூறுகிறேனே தவிர வேறொன்றுமில்லை.

* * *

ஸர் முகம்மது ஊஸ்மான் சாயபு: (போலீஸ் நிருவாகத்தைப் பற்றி வாதம் நடைபெறுகையில்) பயிற்சி யில்லாதவர்களை அரசாங்கத்தார் உத்தியோகங்களுக்கு நியமிக்க முடியாது.

ஸ்ரீமான் சத்தியமூர்த்தி: நிருவாகசபை அங்கத்தவர் உத்தியோகங்கள், மந்திரிப் பதவிகள் இவைகளைத் தவிர.

* * *

ஸர் முகம்மது ஊஸ்மான்: சார்ஜண்டுகளின் சம்பளம் உயர்த்தப்பட்டபோது, எவ்வித நிறவேற்றுமையும் காட்டப்படவில்லை.

ஸ்ரீமான் சத்தியமூர்த்தி: சார்ஜண்டுகளில் இந்தியர் எத்தனை பேர் இருக்கின்றனர்.

ஸர் முகம்மது ஊஸ்மான்: ஒருவரும் இல்லை.

ஸ்ரீமான் சத்தியமூர்த்தி: இதுதான் நிற வித்தியாசம் என்பது.

* * *

ஜனாப் பஷீர் அகமத் ஸையத்: (கலவி இலாகா நிர்வாகத்தைப்பற்றி) ஸ்தல ஸ்தாபன பள்ளிக்கூடங்களில் உள்ள உபாத்தியாயர்கள் அரசியல் கட்சிகளில் சேர்ந்து கொள்வது சகஜமாயிருக்கிறது.

ஸ்ரீமான் சத்தியமூர்த்தி. ஆம்; சுயமரியாதை மகாநாடில், வாலண்டியர்களில் பலர் ஸ்தலஸ்தாபன பள்ளிக்கூட ஆசிரியர்களாகவே இருந்தனர்.

* * *

ஸ்ரீமான் ஹரி சர்வோத்தமராவ்: (வரவு செலவு திட்டத்தைப்பற்றி வாதம் நடைபெற்றுக் கொண்டிருக்கையில், மந்திரிக் கட்சியாரிற் சிலர், தங்கள் ஆசனங்களில் இருந்துகொண்டே தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து) சபையிலேயே அங்கத்தினர்கள் தூங்குவது ஒழுங்காகுமா?

தலைவர்: அதற்குக் காரணம் எதிர்க்கட்சியார் தான். வாதங்கள் ருசிகரமாக இருக்கும்படி அவர்கள் செய்யவில்லை. (நகைப்பு)

* * *

#### இந்தியா சட்டசபை

பண்டித மோதிலால் நேரு: (இந்தியா சட்டசபையில் வரவு செலவு மசோதாவைப் பற்றிவாதம் நடைபெறுகையில்) இப்பொழுதுள்ள ஆட்சிமுறை, இயங்குவதற்குத் தகுதியில்லையானால், அஃது இயங்காமலே நின்றுவிடட்டும்.

ஜனாப் கபீருதீன் அகமத்: அப்படியானால் கதருக்குக் காப்பளிக்கவேண்டுமென்று நீங்கள் ஏன் ஒரு மசோதா கொண்டுவந்திருக்கிறீர்கள்?

பண்டித நேரு: முதலில், உங்களுடைய பாதுகாப்பு வேண்டும். (நகைப்பு)

* * *

திவான் சாமன்லால்: இந்தியா அரசாங்கத்து வரவு செலவு அங்கத்தினர், கணக்குகளைக் காட்டும் ஓர் இயந்திரமாக இருக்கக் கூடாதென்று நான் விரும்புகிறேன். நாட்டின் நன்மைக்கு உழைக்கிறவரா யிருக்க வேண்டும்.

திவான் சாமன்லால்: நிலக்கரிச் சுரங்கங்களில் பெண் மக்கள் மாதம் ஏழு ரூபாய் சம்பளத்தில் வேலைக்கு அமர்த்தப் படுகிறார்கள். இதுவெற்றியா? தோல்வியா? இது மனிதத் தன்மையா? மிருகத் தன்மையா? இராணுவச் செலவை, அதிகமாக வைத்துக்கொண்டு, ஏழை மக்களின் துன்பத்தை நிவாரணம் செய்யாமலே இருக்கிறீர்கள்.

* * *

ஸ்ரீமான் யமுனாதாஸ் மேட்டா: மூன்று தினங்களுக்கு முன்னர் சைமன் கமிஷனர் தில்லியில் வந்திறங்கியபோது, பொதுஜனங்களில் எவரும் அவரை முகமெடுத்துப் பார்க்கவில்லை. இருந்தாலும், ஒவ்வொரு விளக்குத் தூண் அருகிலும் ஒருசிப்பாய், ஒவ்வொரு மரத்தருகிலும் ஒரு சோல்ஜர், ஒவ்வொரு தெருச்சந்திப்பிலும் குதிரைப் படையோ, காலாட்படையோ நின்றுகொண்டிருந்தது. என் இந்தப்பயம்? கிழலைக்கூட உருவம் என்று நினைத்துக் கமிஷனர்கள் மருண்டு விட்டார்களா? இல்லாவிட்டால், சென்ற வருஷம் வெஸ்டர்ன் ஹோட்டலில், சைமன் கமிஷன் அங்கத்தினர்கள் தங்கியபோது நடந்த சம்பவத்திற்கும் இந்த பந்தோபஸ்து ஏற்பாட்டிற்கும் ஏதேனும் சம்பந்தமுண்டா? அந்தச்சம்பவம் என்ன வென்றால், சென்ற வருஷம் சைமன் கமிஷனர் வெஸ்டர்ன் ஹோட்டலில் தங்கியிருந்தபோது இரவுகாலங்களில், நரிகள் ஊளையிடுவதைக் கேட்டு, பகிஷ்காரக்காரர்தான் கூச்சலிடுகிறார்கள் என்று அஞ்சினர். (நகைப்பு) இராத்திரிப்பொழுது அதிகமாக, அதிகமாக, நரிகளின் சத்தம் பெருகவே, பகிஷ்காரக்காரர் தம்மை நெருங்கி வருகின்றனர் என்று கமிஷனர் நினைத்தனர். (நகைப்பு)

* * *

20-3-29 இந்தியா சட்டசபைக்கூட்டத்தில், வரவுசெலவு மசோதாவைப்பற்றி வாதம் நடைபெற்றுக்கொண்டிருக்கையில், பண்டித தாகூர்தாஸ் பார்க்கவர் பேச ஆரம்பித்தார். உடனே, எல்லாக்கட்சி அங்கத்தினர்களும் மேஜையைத்தட்டிச் சத்தம் செய்ய ஆரம்பித்தனர். அக்கிராசனர் இதைக் கண்டித்தார். ஆயினும் சத்தம் அடங்கவில்லை. இந்தியாவின் ஆறு கோடி தாழ்ந்த வகுப்பாரின் குறைகளைக் கேட்க உங்களுக்கு மனமில்லையாவென்று பண்டித பார்க்கவர் கேட்டார். சுயராஜ்யக் கட்சியார், "பேசுங்கள், பேசுங்கள்" என்று கூறினர். சிறிது நேரம் குழப்பம் ஏற்பட்டது. இந்தக் குறிப்பைக் கவனித்துக் கொள்ளும்படி தலைவர் பண்டித பார்க்கவருக்கு எச்சரிக்கை செய்தார்.

பண்டிதநேரு: யாருடைய குறிப்பை நாங்கள் ஏற்றுக்கொள்வது? அரசாங்கக் கட்சியார் கூச்சலுக்கு நாங்கள் சிறிதும் இணங்கப் போவதில்லை.

தலைவர்: எதிர்க்கட்சித் தலைவர், வாதம் தொடங்கப்பட வேண்டுமென்று கருதினால் சபை அதைப்பற்றித் தீர்மானிக்கட்டும்.

பண்டித நேரு: அரசாங்கக் கட்சியார், இந்தக் கூச்சலை நிறுத்தினாலொழிய, நாளை காலைவரை, வாதம் நடைபெற வேண்டுமென்று நான் விரும்புகிறேன். இதற்கு மாறாக, என் கட்சி அங்கத்தினர்க்கு நான் அறிக்கை யிட்டேன். ஆனால் அதை இப்பொழுது நான் வாபீஸ் வாங்கிக்கொள்ள வேண்டியிருக்கிறது.

கடைசியில் விவாதத்தை முடிக்க வேண்டுமென்று பிரேரணை கொண்டுவரப்பட்டு, அது வாக்குக்கு விடப்பட்டு, பெரும் பான்மையோரால் நிறைவேற்றப்பட்டது. பிறகு, வரவு செலவு அங்கத்தினரான ஸர்ஜார்ஜ் ஷூஸ்டர் வாதத்திற்குப் பதிலளிக்க ஆரம்பித்தார். உடனே; எதிர்க்கட்சியினர், மேஜைகளைத்தட்ட ஆரம்பித்தனர். மூன்று நிமிஷநேரம் வரவு செலவு அங்கத்தினர், சும்மா இருந்து, மறுபடியும் இரண்டு வார்த்தைகள் சொல்ல மறுபடியும் மேஜைகளைத்தட்ட ஆரம்பித்தனர். அக்கிராசனர், ஒழுங்கு, ஒழுங்கு, என்று கூறவும் சிறிது அமைதி ஏற்பட்டது. வரவு செலவு அங்கத்தினர், மறுபடியும், "இந்த வாதம்" என்று ஆரம்பிக்கும் போது மறுபடியும், சத்தம் தொடங்கியது. மறுபடியும் பேச்சு; மறுபடியும் சத்தம், பிறகு, அக்கிராசனர் விதிகளைப்படித்துக்காட்டி, எதிர்க்கட்சியார், நியாயமாக நடந்துகொள்ள வேண்டு மென்று கேட்டுக்கொண்டார். சிறிது அமைதி ஏற்பட்டது. வரவு செலவு அங்கத்தினர், மீண்டும் பேச எழுந்தார். மறுபடியும் சத்தம் ஆரம்பித்தது.

தலைவர்: எதிர்க்கட்சியார், சத்தம் போடாமலிருக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஸ்ரீமான் கயாபிரசாத்சிங்: அரசாங்கக் கட்சியார் சத்தம் செய்யும்போது, நீங்கள் ஒன்றும் கூறவில்லையே!

தலைவர்: அக்கிராசனர் மீது பழிதீர்த்துக் கொள்கிறீர்களா? (இல்லை; இல்லை யென்ற சத்தம்.)

(12-ம் பக்கம் பார்க்க)

## மதிப்புரை

### திருப்போரூர் சந்நிதி முறை

[திரட்டியவர் : திருவாளர் மா. துரைசாமி முதலியார் அவர்கள்; புத்தகம் கிடைக்குமிடம் :—முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை; விலை : ஐந்தணு.]

ஓதுவார் உள்ளத்தை உருக்கும் நூல் திருவாசகமென்று அறிஞர் எவருங் கூறுவர். அத் திருவாசகத்துக்கு இரண்டாவதாகத் தமிழிலுள்ள நூல் திருப்போரூர் சந்நிதி முறை யென்று சொல்வது மிகையாது. திருப்போரூர் சந்நிதிமுறையை அருளிய ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் அகங் குழைந்து குழைந்து பாடினாரென்பது அவர் பாக்களால் அறியக் கிடக்கிறது. உருகிய உள்ளத்தினின்றும் எழும் பாக்கள் தங்களை ஓதுவோர் உள்ளத்தையும் உருக்குவதை அனுபவத்தில் காணலாம். இரும்பு நெஞ்சை இளகுவிக்கும் பாக்களே கடவுள் பூசைக்கு வேண்டற்பாலன. திருப்போரூர் சந்நிதி முறைக்கண் அவ்வியல்பிருத்தல் வெள்ளிடைமலை. அப்பெரு நூலை முற்றும் ஓதியுணர்தலின் அருமை நோக்கித் திருவாளர் மா. துரைசாமி முதலியார் அந்நூலினின்றும் பல அன்புப் பாக்களை அமுதம் கடைந்தெடுத்தாற் போலத் திரட்டி எடுத்திருக்கிறார். அத்திரட்டிலுள்ள ஒவ்வோர் பாட்டும் உளத்தை உருக்கிக் கண்ணீர் பெருகச் செய்கிறது. அரும்பதங்கட்கும் திருவாளர் முதலியார் உரை வரைந்திருக்கிறார். அறுமுகக் கடவுளிடத்து அன்புடையோர் பூசா காலங்களிலும் மற்றக் காலங்களிலும் ஓதி இன்புறுதற்கு இத்திரட்டு பெருந் துணை செய்யுமென்பதில் ஐயமில்லை.

### தேவாரப் பண்சுர அமைப்பு (முதற்பாகம்)

[ஆசிரியர் : திருவாளர் ஜலதரங்கம் இ. அப்பாசாமி ஓதுவா மூர்த்தி அவர்கள்; கிடைக்குமிடம் : ஸ்ரீ கான வித்தியா பிரஸ், ஸ்ரீ வைகுண்டம்; விலை : தெரியவில்லை.]

இப்பெயர் வாய்ந்த நூலின் முதற்பாகம் வரப்பெற்றோம். தேவாரம் பண்ணுடன் பாடப் பெறல் வேண்டுமெனப் பெரியோர் பலர் கூறியுள்ளார். பழம் பண் முறை பெரிதும் இறந்து பட்டதை ஈண்டு விரிக்க வேண்டுவதில்லை. அப்பண்ணிற்குப் பதிலாகத் தற்காலச் சுரத்தை அமைத்தல் இசை புலமிற்கு நலம் புரிவதாகும். அந்நலத்தைத் தமிழுலகுக்கு வழங்கிய இந்நூலாசிரியர் திருவாளர் இ. அப்பாசாமி ஓதுவா மூர்த்தியவர்கட்கு நமது நன்றியறிதல் உரியதாக. அவர் கோலியுள்ள சுரஅமைப்பு முறையைக் காஞ்சி சங்கீத வித்துவான் திருவாளர் சி. சுப்பிரமணியப்பிள்ளை அவர்களும், திருவனந்தபுரம் திருவாளர் இலட்சுமணபிள்ளை அவர்களும், திருநெல்வேலி திருவாளர் ச. சுந்தர ஓதுவா மூர்த்தி அவர்களும் போற்றி மதிப்புரை வரைந்துள்ளார்கள். இவர்கள் மதிப்புரை பெற்ற நூலை நாம் புகழ்ந்து கூற வேண்டுவதில்லை. மேலே தேவாரமும் கீழே சுர அமைப்பும் விளங்கும் முறையில் நூல் அச்சிடப் பட்டிருக்கிறது. தேவாரத்தைச் சுரத்தில் அமைத்துப் பாடுவோர்க்கு இந்நூல் பெருந்துணை செய்யு மென்பதில் ஐயமில்லை. இசையுலகம் இந்நூலை ஆதரிப்பதாக.

### கண்ணகி

[ஆசிரியர் : திருவாளர். சி. என். இராஜாப்பிள்ளை அவர்கள், தலைமைத் தமிழ்ப் பண்டிதர், வூர்ஹீஸ் காலேஜ், வேலூர்; வெளியிட்டோர், பி. திருவேங்கடரங்கநாதம் அண்ட் கம்பெனி, வேலூர்; விலை ஆறணு.]

தமிழ்நாட்டுக் கற்பரசியாகக் கணிபெனத் திகழும் கண்ணகியின் சரிதம், நாடகமாகவும், பாணியாகவும், எற்றப் பாட்டாகவும், சிந்தாகவும் பிற வடிவமாகவும் யாக்கப்பட்டு, தமிழ்நாடு முழுவதும் பரப்பப்பட வேண்டுமென்பது நமது பெரு விருப்பம். இவ்விருப்பத்தைத் தற்போது, நமது பார்வைக்குக் கிடைத்துள்ள இந்நூல் ஒருவாறு பூர்த்திசெய்கிறது. பெண் மக்களும், இளைஞரும், படித்தானந்திக்குமாறு எளிய இனிய தமிழ் நடையில் இந்நூல் எழுதப்பட்டிருக்கிறது. நூலிடையே, ஆங்காங்குச் சிலப்பதிகாரச்செய்யுள்களும் மிளிர்கின்றன. இவைகளை இளைஞர்கள் மனப்பாடஞ் செய்தல் நலம். "கண்ணகி வஞ்சினம் உரைத்தது" என்ற தலைப்பின் கீழுள்ள அத்தியாயம் மிக அழகாக வரையப்பட்டிருக்கிறது. இத்தகைய நூல்களைப் பாடபுத்தகங்களாக வைப்பின் பள்ளிக்கூட மாணவர்கள் நற்பயனடைவார்களென்று நம்புகிறோம்.

### பொன் கதைக்கொத்து

[ஆசிரியர் : திருவாளர் கே. பி. சந்தோஷம் பி. ஏ. எல். டி. அவர்களும் சி. எஸ். இராஜாப்பிள்ளை அவர்களும்; வெளியிட்டோர். பா. திருவேங்கடரங்கநாதம் கம்பெனியார், வேலூர்; விலை நான்கணு.]

இச்சிறிய நூல், இளைஞர்களின் உபயோகத்திற்கென்று, ஆங்கிலக் கதைகள் சிலவற்றிலிருந்து திரட்டி எழுதப்பட்டிருக்கிறது. இதில், பொன்தட்டு, மரத்தின் கீழிருந்த புதையல், பழமையிலுள்ள எழுத்து, தொட்டதெல்லாம் பொன் என்ற நான்கு கதைகள் இருக்கின்றன. இக்கதைகள் இளைஞர்களுக்குப் பெரிதும் இன்பம் பயப்பன. இந்நான்கு கதைகளும் பொன்னைப் பற்றியே கூறுகின்றமையால், இந்நூலுக்குப் "பொன்கதைக் கொத்து" என்று பெயரிடப்பட்டிருக்கிறது. தமிழ் மாணவர்களுக்கு இச்சிறு நூல் ஒரு நல்விருந்தாகும். பெரிய எழுத்துக்களில் பிழையற நன்கு அச்சிடப்பட்டிருக்கிறது.

### காசி அல்லது புண்ணிய பூமி

[ஆசிரியர்: திருவாளர் கே. எஸ். முத்தையா அவர்கள்; வெளியிட்டோர் : கே. எஸ். முத்தையா அண்ட் கம்பெனியார், சென்னை; விலை ஒரு ரூபாய் நாலணு.]

இந்நூலின் மூன்றும் பதிப்பு வெளிவந்திருப்பதிலிருந்தே, இது, தமிழ் நாட்டாரால் பெரிதும் பாராட்டப்படுகின்றதென்பது நன்கு புலனுகும். தமிழ் நாட்டிலுள்ளோர், காசிமா நகரஞ்சென்று, கங்காநதி ஸ்நானமும், விசுவநாதர் தரிசனமும் செய்ய வேண்டுமென்று விரும்பினுல்,அவர் இந்நூலை முற்றும் படித்தல் அவசியம். அப்புண்ணிய நகரத்தின் கண்ணே என்னென்ன விசேஷங்களைப்பார்க்க வேண்டும், எப்படி எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்ற எல்லா விவரங்களும் இந்நூலில் அடங்கியிருக்கின்றன.

### பற்பொடி வரவு

மதுரை, அமெரிக்கன் வேர்ஹவுஸ், கற்பக டிப்போவிலிருந்து "கற்பகம் பற்பொடி" டப்பி ஒன்று வரப்பெற்றோம். இந்தப் பற்பொடி வாசனை பொருந்தி யிருக்கிறது. ஒருடப்பி விலை அணு 4. இத்துடன் இவர்களுடைய 1929-ம் வருடத்து அழகிய காலண்டர் இரண்டும் கிடைக்கப் பெற்றோம்.

நாகப்பட்டணம், கெ. எஸ். எ. எஸ். பிரதர்ஸ் அவர்களிடமிருந்து "கல்நார்" பற்பொடி மாதிரி பொட்டணம் ஒன்று வரப்பெற்றோம்.

சென்னை, இராயப்பேட்டை பன்னீர் வியாபாரம், ஜி. எ. ஆனந்தஜெயின் அவர்களிடமிருந்து "ஆனந்தஜெயின் பற்பொடி" டப்பி ஒன்று வரப்பெற்றோம். இப் பற்பொடி சாஸ்திரீயமுறையில் தயார்செய்யப் பட்டிருக்கிறது. விலை அணு 2.



## யுத்தமும் பெண் மக்களும்

"யங் இந்தியா" பத்திரிகையில் வெளி வந்துள்ள ஒரு கட்டுரை வருமாறு :—

யுத்தத்தை அறவே ஒழிக்க வேண்டுமென்ற ஓர் இயக்கம் மேனுடுகளில் தீவிரமாகப் பரவி வருகிறது. இதில் பெண்மக்கள் அதிகமாகத் தலையிட்டுழைக்கிறார்கள். ஜனவரி மாதம் நான்காந் தேதி கூடிய ஸ்திரீகளின் சர்வதேச மகா நாட்டில் கீழ்க்கண்ட விண்ணப்பம் வெளியிடப்பட்டது:-

"முற்காலத்தில் யுத்தம் குறித்த ஓரிடத்தில்மட்டும் நடைபெற்றது. எனவே, அதனுலேற்பட்ட துன்பங்கள் ஓரிடத்தனவாகவே இருந்தன. இப்பொழுது, ஓரிடத்தில் யுத்தம் கிளம்பினுல், அஃதெங்கும் பரவுகிறது. முற்காலத்தில், யுத்தத்தினுலுண்டாகும் பயமும் ஆபத்தும் ஓரிடத்தையே பொறுத்தனவாயிருந்தன. இப்பொழுதோ எல்லா இடங்களும் பாதிக்கப்படுகின்றன. இதைவிட பயங்கரமான உருவத்தில். யுத்தம் உலகத்தை அழிக்கவில்லை; விசாலமான பாகங்களையும் அழிக்கவில்லை. தற்காலத்திய நாகரிகக் கருவிகளைப்போல், உலக ஜனங்களை வேறெவையும் அழிக்கவில்லை.

தற்காலத்தில், புதிதாகக்கண்டு பிடிக்கப்பட்டிருக்கும் புதியகருவிகளால், எதிர்காலத்தில் ஏற்படும் யுத்தத்தினுல் எத்தகைய பயங்கரங்கள் உண்டாகும் என்பதை நாம் ஆலோசித்துப்பார்க்க வேண்டும். விமான ஓட்டிகளின்றி, ரேடியோ மூலமாக இயக்கப்பட்ட ஆகாய விமானங்கள், விஷக்காற்றையும் வெடிகுண்டுகளையும் ஏற்றிக்கொண்டு சுற்றிவருமானுல், ஒரே சமயத்தில் லண்டன், பாரிஸ், பர்லின் முதலிய நகரங்களை அழித்துவிட முடியும். விஷக்காற்று, மனிதர்களை மாத்திரம் கொல்வதில்லை; பூமியையும் நீரையும் விஷமாக்கி விடுகின்றது. இரசாயனப் பொருள்கலந்த வெடிகுண்டுகள், அதிக உஷ்ணத்தை வெளிப்படுத்தி, பூமியிலுள்ள புல்பூண்டு எல்லா வற்றையும் அழித்துவிடும். எனவே, எதிர்கால யுத்தமானது, ஜனங்களை அடியோடு அழித்துவிடுவது மல்லாமல், நாகரிகத்தையே அழித்து விடக்கூடிய தென்று யாரேனும் உணர்ந்திருக்கின்றனரா? ஆயுத பலத்தை அதிகரித்துக்கொள்ள ஒவ்வொரு தேசமும் முயன்று வருகின்றது. இம்முயற்சி வெற்றி பெறுமானுல், சீக்கிரத்தில் ஒருயுத்தம் நடைபெறு மென்பது நிச்சயம். பொது ஜனங்கள், இந்த ஆபத்தை அறிந்துகொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகும். ஆயுதப்பரிகார ஒப்பந்தத்தில் ஏறக்குறைய எல்லாத் தேசங்களும் கையெழுத்திட்டிருக்கின்றன. புதிய யுத்தங்கள் நடைபெறுமலிருக்கவேண்டு மென்பதற்காகவே, ஆயுதப் பரிகாரம் வேண்டுமென்று கூறப்படுகிறது. ஆதலின், எங்களுடைய முயற்சியில் யாவரும் ஆதரவு கொடுப்பீர்கள் என்று நம்புகிறோம்.

இந்தக் கடைசி உதவியைச் செய்ய நாம் ஏழைகளா யிருக்கிறோம். தவிர, யுத்தத்தில் பங்கெடுத்துக் கொள்ளக்கூடிய ஒரு சமூகமாக நாம் இல்லை. நாம் சுதந்திரம் பெறும் வரை, யுத்தத்தினு லுண்டாகும் கொடுமைகளுக்கு நாம் இரையாக வேண்டும். ஆனுல், உலக சமாதானத்திற்கு, நாம் வேறு வழியில் உதவி செய்யலாம், பலாத்கார மற்ற முறையில், நாம் நமது சுதந்திரத்தைப் பெறுவதே இவ்வுதவி யாகும். 1920-ம் வருஷத்திய காங்கிரஸ், பலாத்கார மற்ற முறையில்சுயராஜ்யத்தை யடையவேண்டுமென்று தீர்மானித்திருப்பதை உலக சமாதான நண்பர்கள் அறிய வேண்டுகிறேன். இதை நாம் நிறைவேற்றினுல் உலக சமாதானத்திற்குப் பெரிதும் உதவிசெய்தவர்களாவோம்.





## இந்து மதம் என்னும் திவ்யவனத்துள் தீப்பற்றுகிறது

சநாதன தர்மங்களென்ற சத்விருக்ஷங்களடங்கியதும், அசோகவன வாழ்க்கைபாக அநேககாலமாய் அபிமானித்து அனுபவித்து வந்ததுமான நம் பரதநாட்டில் வளர்ந்தோங்கிய புராதன தர்ம கற்பகத்தருக்கள், சில காலமாக தீய இயக்கத்தணலால் தகிக்கப்படுகிறது.

அத்தீ அதன் சகாக்களும் சதா நாடெங்கும் சஞ்சரித்துக் கொண்டிருப்பதால் அடியிற்கண்ட அருமை விருக்ஷங்களனைத்தும் அழிவுறுமோவெனத் தோன்றுகிறது. அவையாவன:—

நான்கு கற்கிளைகளோடு பலதிசைகளிலும் பரவி ஜீவர்களைத் தன் வயப்படுத்தி ஆதரித்துள்ள சதுர்வேத விருட்சங்களும்,

அதன் விதையினின் றுண்டாகியதும், எண்ணற்கரியதும், பல மகரிஷிகளால் பட்சமாய் வளர்க்கப்பட்டதுமான உபநிஷத்தென்னும் உன்னத விருட்சங்களும்,

அளவிறந்த ஆகம விருக்ஷமும், ஆஸ்திக முதவு மழகிய விருக்ஷமும், ஆலய வழிபாடாகிய விருக்ஷமும், இன்பமளிக்கும் இதிகாச விளைவும், ஈஸ்வர தோத்திர இளநற்கொடியும், உத்ஸவங் திகழும் உயர் மாமரமும், கர்மானுஷ்டான காட்சித்தருக்களும், குரு விஸ்வாசத் திரு மிகுத்தருவும், சடங்காச்சார சம்ப்ரம விருக்ஷமும், தலயாத்திரையாந் தருமநற் றருவும், தேவபாஷையாந் தேன்பொழி விருக்ஷமும், பழக்கவழக்கப் பல்வகைத் தோப்பும், பஜனைப்ரவாகப் படர் கொடிச் செடிகளும், பிதிர்க் கடனென்னும் பிரபலமரங்களும், புராணவகையாம் பூஞ்சாவனமும், புண்ணிய கண்ணிய புஷ்பச்செடிகளும்,மதவைதீக மாட்சித் தருக்களும், மணமுறை யென்னுங் குணநிறைத்தருவும், மாதர் நியதிமாம லர்ச்சோலையும், முத்தியின் மார்க்க முறும் பற்றருவும் முன்னோரனுபவ முதிர்கனித்தருவும், மூர்த்தி வணக்க முறைமை நன்மாமும், யாக யெக்ஞதியான விருக்ஷமும், வகுப்புக்தொகுப்பாம் வானுயர் தோப்பும், ஜோஸ்ய மந்த்ராதி சூக்ம சோலையும், விரத மான்மிய விளக்க விருக்ஷமும், தாங்கிரஸ் தம்பமுங் சதர்க்கொடி மாமும், இன்னயனேக எழில்மிகு வகையும்

மேற்கூறிய இயக்க அக்கினியால் இடர்ப்பட்டு வருவது பிரத்தியக்ஷம். இதுபற்றி நம் ஆஸ்திகப் பற்றுடையாரும், மகதர்ம பரிபாலன மடாதிபதிகளும் மௌனமாயிருத்தல் நலமோ! வியாதியை வெளியிற்சொல்ல வெட்கி முடிவில் மடிவதுபோலாகு மன்றோ! இது என்ன செய்துவிடப் போகிறது என்ற எண்ணமா? சிறுதுளிகள் சேர்ந்து பெருவெள்ளமாய்ப் பலநாடுகளைப் பாழ்படுத்தியவண்ணம் ஆகுமன்றோ! அலட்சியமாயிருத்தல் சரிதானு? பரிகாரம் செய்யும் பெரியோர்களில்லையா? யுகதர்மச் செயல் இதற்கென் செய்வது என்ற யோசனையா?

அல்லது ஷை நவீன இயக்கத்தாரவர்களால் கூறுகின்ற காரணங்களும். நடவடிக்கைகளும், அதை ஒப்பிய மக்களின் செய்கைகளும், நியாயந்தானுவென்பதை அறிய ஆவலுடன் விரும்பும்,

M. ஷண்முகம் பிள்ளை,
மன்னார்குடி.

இத்தலியில், மோடார் வண்டிகளை உற்பத்தி செய்யும் ஒரு தொழிற்சாலைக் கட்டிடத்தின் மேன்மாடியில், சுமார் முக்கால் மைல் நீளமுள்ளதும், எழுபது அடி அகலமுள்ளதுமான ஒருபாதை அமைக்கப்பட்டிருக்கிறது. அக்கம்பெனியில் உற்பத்தி செய்யப்படும் மோடார் வண்டிகள் சரியாக ஓடுகின்றனவா என்று பரீட்சித்துப் பார்க்க, இத்தப்பாதை உபயோகப்படுத்தப் படுகிறது.

o o o

சென்ற ஆண்டு டிசம்பர் மாதத்தில், "வாக்குவம்" கம்பெனி காரியஸ்தராயிருந்த மிஸ்டர் காலட் என்னும் ஐரோப்பியர் அஜாக்கிரதையாகவும், வேகமாகவும் தம் மோட்டாரைச் செலுத்தி இருவரை மரணமடையச் செய்ததற்காக, ஜார்ஜ் டவுன் மாஜிஸ்ட்ரேட்டால் மூன்றாண்டு கடுங்காவல் தண்டனையும், ரூ 500 அபராதத் தொகையும் விதிக்கப்பட்டதும், பின்னர் சென்னை ஐகோர்ட்டில் அப்பீல் செய்யப்பட்டதும் நேயர்கள் அறிந்ததே. ஹைகோர்ட்டார் 20 3-39 ல் கீழ்க்கோர்ட்டாரால் விதிக்கப்பட்ட மூன்றாண்டுக் கடுங்காவல் தண்டனையை 18-மாதமாகக் குறைத்து, ரூ. 500 அபராதத் தொகையை ரூர்ஜிதப் படுத்தினுர்.

## கன்னி மேயோ

### தீனபந்து ஆண்ட்ரூஸின் சந்திப்பு

கன்னி மேயோவைத் தாம் சந்தித்துப் பேசியதைப்பற்றி தீனபந்து ஆண்ட்ரூஸ் "யங் இந்தியா" பத்திரிகையில் பின்வருமாறு எழுதுகிறார் :—

கன்னி மேயோவினுல் எழுதப்பட்ட "இந்தியத்தாய்" என்னும் புத்தகத்தைப் பற்றி நான் கட்டுரைகள் வரைந்த காலத்தில், அவர் மேற்படி புத்தகத்தை எழுதியதற்குச் சில அரசியல் நோக்கங்கள் இருக்க வேண்டுமென்று கூறினேன். அப்படிக் கூறியதனுல், அவரை நேரிற்கண்டு சம்பாஷிக்க வேண்டுமென்ற ஆவலுடையவனுக இருந்தேன். ஒரு சந்தர்ப்பமும் கிடைத்தது.

நான் சந்தித்து, அவருடன் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தேன். அச்சம்பாஷணையில், அவரே அதிக பங்கெடுத்துக் கொண்டார். அவர், பிறருடைய தூண்டுதலின்றி, எவ்வித அரசியல் நோக்கமுமின்றி, தனியானதோரணையிலேயே இந்தியாவுக்குச் சென்றிருக்கிறார் என்று உணர்ந்து கொண்டேன். இதனுல், அவருடைய புத்தகத்தைப்பற்றி இன்னும்அதிகமாகவேசிந்திக்கவேண்டியிருக்கிறது.கீழ்நாட்டைவிட, மேனுட்டில் இயந்திரங்கள் மூலமாக சுகானுபவங்களும் சௌகரியங்களும் உண்டாகிறபடியால், இருநாடுகளும் பிரிந்து செல்வதற்கு அநுகூலங்களிருக்கின்றன. மேற்போக்காகக் கவனிக்கிறவர்கள், இந்தப் பிரிவை அதிகப்படுத்தியவர்களாவார்கள். மேனுட்டு இயந்திர முறைகளை விரும்பாத ரிச்சார்ட் கிரெக், வில்லியம் சிம்ப்ஸன் முதலியோர், இந்தியாவை அறிந்து அதனை நேசிக்கக் கூடும். இவர்கள், இந்தியாவின் மனோபாவத்தைச் செவ்வனே உணர்கிறார்கள். ஆனுல் கன்னிமேயோவைப் போன்றவர்களால், இந்தியாவை ஒருபோதும் அறிந்துகொள்ள முடியாது. எனவே, அவர் இந்தியாவைப் பற்றி எழுதுவது தவறுகவே இருக்கும். கன்னிமேயோவுடன் சம்பாஷித்துக் கொண்டிருந்தபோது, மேற்குறித்த எண்ணமே எனக்கு உதயமாயிற்று. 'இந்தியத் தாய்' என்னும் நூலை அவர் எழுதியதற்கு அரசியற் காரணங்கள் இருக்கவேண்டுமென்று நான் கூறியது தவறு. அதற்காக நான் இப்பொழுது விசனிக்கிறேன். மேனுட்டில், இயந்திர உலகத்தை வெறுக்கும் நல்ல ஆத்மாக்களும் இல்லாமல் இல்லை. அவர்கள், இந்தியாவின் உணர்ச்சியை எளிதில் அறிந்து கொள்வார்கள்.

மகாத்மா காந்தியின் குறிப்பு: தீனபந்து ஆண்ட்ரூஸ், கன்னிமேயோவைப் பற்றிக் கூறியதை வாபீஸ் வாங்கிக் கொண்டுவிட்ட போதிலும், அவர் எழுதிய புத்தகத்தில் அரசியல் துவேஷம் நிரம்பி யிருக்கிறதென்ற என் கொள்கையில் நான் மாறுதவனு யிருக்கிறேன். அப்புத்தகத்தில், நூலாசிரியருக்குத் தெரிந்த பல பொய்கள் அடங்கியிருக்கின்றன. அதற்குப் பிறகும் அவர் பல பொய்க் கட்டுரைகளை எழுதி யிருக்கிறார். அப்படி யிருக்கும்போது, அரசியல் துவேஷமில்லை யென்று கூறுவது பொருந்தாது.

### சைவப்பெரியார் தனிக்கூட்டம்

1929-ம் ஹு மார்ச்சுமீ 20உ புதன் கிழமை மாலை 7 மணிக்குப் பேரூரில் திருவாவடுதுறை ஆதீன மடாலயத்தில் ஸ்ரீலஸ்ரீ முத்துக்கற்பகக் குருக்களையா அவர்கள் தலைமையில் சைவக் கூட்டம் ஒன்று கூடியது. அப்பொழுது, நாளது 1929ஹு மார்ச்சுமீ 29,30,31-ந் தேதிகளில் திருநெல்வேலியில் கூடும் சைவப்பெரியார் தனிக்கூட்டத்தையும் அதன் நோக்கங்களையும் இக்கூட்டம் பெரிதும் ஆதரிப்பதாகவும் சைவசமய நிந்தனை சைவாசாரிய நிந்தனை சைவசாஸ்திர நிந்தனை முதலிய சைவ நிந்தனையே மலிந்து நாத்திகக் கொள்கையைப் பரப்பிவரும் பத்திரிகைகள், பிரசுரங்கள், பிரசாரங்கள் முதலிய தீய இயக்கங்களைக் கண்டிப்பதாகவும், மேற்படி மகாநாட்டிற்கு இக் கூட்டத்தார் பிரதிநிதியாக சைவத் திருவாளர் V. M. கணபதி பிள்ளை அவர்களைத் தேர்ந்தெடுத் தனுப்பத் தீர்மானிப்பதாகவும், சைவத்திற்கு மாறுக உள்ள முயற்சிகளைக் கண்டித்து உண்மை அன்பு மயமான சைவ சமய வளர்ச்சிக்கான எல்லா வழி வகைகளையும், இயன்ற மட்டில் செய்ய வேண்டுவது எல்லாச் சைவர்களின் கடமை என்பதை இச்சங்கம் வற்புறுத்துவதாகவும், சைவத்திற்குப் பெரிதும் உழைத்துவரும் திருவாளர் C. K. சுப்ரமணிய முதலியா ரவர்களுக்கு நீண்ட ஆயுளையும் சகல ஐசுவரியத்தையும் ஆண்டவன் கொடுக்க வேண்டு மென்று பிரார்த்திப்பதாகவும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன என்று ஓர் அன்பர் அறிவிக்கிறார்.

## சமயப்பற்றுடையவர் கடமை

சமயத்தின் முக்கிய கொள்கை அமைதி-அன்பு-என்பது யாவரும் ஒப்பமுடிந்த உண்மை. ஆனுல் மதத்தில் இடைக்காலத்திலுண்டான சிலமாறுதல்களின் பயனுக அமைதி, அன்பு, உண்டாதற்கு ஏதுவாய மதமே இஞ்ஞான்று மக்களிடை கலாம், பிணக்கு,பூசல்,போர்முதலியனநிகழ்வதற்கு ஏதுவான நிலையிலிருக்கின்றது. இதைக் காரணமாகக் கொண்டே இஞ்ஞான்றைய சீர்திருத்தக்தினர் (Reformers) மக்களுக்கு மதம், சமயம் இன்றியமையாத தொன்றல்ல என்று சாற்றுகின்றனர்.

ஆனுல் சமயத்தின் கொள்கைகள் உள்ளபடியே தற்கால சமூகவாழ்விற்கு இடையூறு பயக்கத்தக்கனவாயிருக்கின்றனவா வென்று ஆராய்ந்தால் ஆண்டவனறிய மதம் அத்தகையதன்று என்ற முடிவுக்கு யாவரும் வருவர். மக்களை விலங்கு நீர்மையினின்றும் வேறு படுத்துவது சமயமேயாகும். ஆறுவதறிவாகிய மனவுணர்வின் பயன் சமய உணர்ச்சி வாய்க்கப்பெறுதலாம். சமய உணர்ச்சி வாய்க்கப்பெற்றவனுள்ளத்திலேயே சமரசம், சகோதரத்துவம், தன்மதிப்பு முதலியன எழும். அவனே அக்கொள்கைகளைச் செயன் முறையில் கடைப்பிடித் தொழுகுபவனுவான். இஞ்ஞான்று எதைச்சமயம் என்று சொல்லுகிறோமோ அது சதாரண சடங்குகளுக்குரிய பெயராக விருக்கிறது. அதாவது பிராணனற்ற உடலை யொத்திருக்கிறது. தற்போது உலக வழக்க வொழுக்கங்களை - சடங்குகளை மூடப்பழக்கங்களை - யெல்லாம் சமயமெனக் கொண்டொழுகும் வைதீகக் கோட்டியினராலும், இம்மூட பழக்க வழக்கங்களையெல்லா மொழித்து மக்களை நன்னெறியில் செலுத்துவோ மென முழக்கஞ்செய்து மறத்துறைகளைக் கடைப்பிடித் தொழுகும் சீர்திருத்தக்தின ரென்போராலும் சமூகம் பாழ்படுகின்றது. சமயத்தை விளையாட்டுக் கருவியெனக் கருதுவோர் பலரிருக்க, சமயம் பழிப்புண்டாகாம லிருக்குமா? என்று வினவுகிறோம்.

எனவே, உண்மைச்சமயஉணர்ச்சியுடைய ஆன்றோர்கள் - செப்பமுடையவர்கள் மேற்சொன்ன இரு குழுவினரால் நடை பெறும் குழப்பங்களையெல்லாம் அன்புவழி நின்று நீக்கி மக்களிடை சமயஉணர்ச்சியைப்பரப்பி அதன் பயனுகிய அமைதியை நிலவச்செய்யும் முறையைக் காணுதல் வேண்டும். "கடவுள் காட்டுவர்" சமயத்தின் இன்றியமையாமையையும், அதன் உண்மைக் கொள்கைகளையும் யாண்டும் மக்கள் உளங்கொளப் போதித்தலே சமயத்திற்கு உண்டாகும் பழிப்பைப் போக்கும் எளியமுறையென அறிவித்துக் கொள்கிறேன்.

என். துரைக்கண்ணன்.

### 33-வது தமிழ் மாகாண மகாநாடு வரவேற்பு சபை

தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்களுக்கும், தஞ்சை ஜில்லாவிலுள்ள தாலுகா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசிகளுக்கும் அறிவிப்பு :—

வேதாரண்யத்தில் நடைபெற விருக்கும் 33-வது தமிழ் மாகாண மகாநாட்டுக்கு வரவேற்புக் கழகம் அமைக்க அடியிற்கண்ட எங்களைத் தமிழ்நாடு காங்கிரஸ்கமிட்டியார் கேட்டுக் கொண்டிருக்கிறதைத் தாங்கள் அறிவீர்கள்.

அதன்படி மகாநாட்டுக்கான வேலைகள் பூர்வாங்கமாக நடந்துகொண்டு வருகின்றன. தவிர, கூடிய சீக்கிரத்தில் வரவேற்புக்கழக உத்தியோகஸ்தர்களின் தேர்தல்கள் நடைபெற வேண்டியிருப்பதால் தாங்களும் தங்கள் கமிட்டி நிர்வாகிகளும் அதில் கலந்து கொள்ள வேண்டியது முக்கிய கடமையாகும். ஆதலால் வரவேற்புக் கமிட்டி அங்கத்தினர்களாகச் சேர. தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி விதிகள், அநுபந்தம் 3, விதி 6 படி, குறைந்தது ரூ. 5 (ஐந்தாவது) கொடுக்க வேண்டும். அதை ஏப்பிரல்மீ முதல் வாரத்துக்குள் "காரியதரிசி, தாலுகா காங்கிரஸ் ஆபீஸ், வேதாரண்யம்" என்ற விலாசத்திற்கு அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

தங்கள்,

அ. வேதரத்தினம் பிள்ளை
அனந்தராஜய்யன் முதலியார்
பே. ம. சுப்பையா
முத்துக்குமாசாமி பிள்ளை
எம். இராமசாமி சாஸ்திரிகள்
வேங்கடகிருஷ்ண பிள்ளை.

## மைனர் சொத்துக்களுக்குக் கார்டியன்

சென்னைச் சட்டசபையில் கீழ்க்கண்ட கேள்விகளைக் கேட்கப்போவதாக ஸ்ரீமான் பி. பக்தவத்ஸலு நாயுடு அறிக்கை கொடுத்திருக்கிறார் :—

சென்னையில் அபிஷல் டிரஸ்டி யார் என்று அரசாங்கத்தார் தெரிவிப்பார்களா?

மைனர் சொத்துக்களின் கார்டியன் என்ற முறையிலும், இந்த அபிஷல் டிரஸ்டி வேலைகளை ஏற்றுக்கொள்கிறாரா?

இந்த உத்தியோகஸ்தர் ஆக்ட் செய்வதனுல், உண்டாகும் நஷ்டத்தை அரசாங்கத்தார் ஏற்றுக்கொள்ள வேண்டுமோ?

மைனர்களின் சொத்துக்களுக்குக் கார்டியனுக வேலை பார்க்க அபிஷல் டிரஸ்டிக்கு அதிகாரமுண்டா?

எத்தனை மைனர் சொத்துக்களுக்கு இந்த அபிஷல் டிரஸ்டி, கார்டியனுக வேலை பார்க்கிறார்?

இந்தச்சொத்துக்களின் பெயர்களென்ன? இவைகளின் மதிப்பு எவ்வளவு? இவைகளிலிருந்து உண்டாகும் உற்பத்தி எவ்வளவு?

ஷண்முகசுந்தரம் என்ற ஒரு மைனருடைய கார்டியனுக, இந்த அபிஷல் டிரஸ்டி வேலைபார்க்கிறாரா?

மேற்படி மைனர் சொத்துக்களை நீண்டகால குத்தகைக்கு விடுகையில், இந்த அபிஷல் டிரஸ்டி, பொதுஜனங்களுக்குத் துண்டு பிரசுரங்கள் மூலமாகவோ, பத்திரிகை விளம்பரங்கள் மூலமாகவோ தெரிவித்தாரா? தெரிவித்திருந்தால், எந்தெந்தப் பத்திரிகைகளில் விளம்பரம் வெளியிட்டிருந்தார்?

மேற்படி அபிஷல் டிரஸ்டி, பொது ஜனங்களுக்கு அறிவியாமல், மேற்படி பூஸ்திதிகளின் பிற்கால நன்மைக்கு விரோதமாக, நீண்டகால குத்தகைக்கு ஒப்பந்தம் செய்துகொண்டார் என்பது உண்மைதானு?

மேற்படி பூஸ்திதியைச் சேர்ந்த தென்னந் தோப்புகளைக் குத்தகைக்கு விட்டதன் சம்பந்தமாக நடந்த கடிதப் போக்குவரத்துகளையோ, அது சம்பந்தமான பிற விஷயங்களையோ அரசாங்கத்தார் வெளியிடுவரா?

அபிஷல் டிரஸ்டியே, மைனர் சொத்துக்களுக்குக் கார்டியனுக நியமிப்பதைப் பற்றி அரசாங்கத்தார் நீர ஆலோசிப்பார்களா?

இந்த ஏற்பாட்டினுல் அரசாங்கத்தாருக்கு நஷ்டம் ஏற்பட்டதுண்டா?

மைனர் சொத்துக்களின் நிருவாகத்திற்காக அரசாங்கத்தார் ஏதேனும் கமிஷன் வாங்குகின்றனரா? அப்படியானுல், மேற்படி பூஸ்திதியி னின்று எவ்வளவு கமிஷன் கிடைத்தது?

21-3-29 யன்று இரவு தென்மாப்பட்டு வைக்கம் வீரர் வாசக சாலையின் சார்பாய் திரு. கோவிந்தசாமி பிள்ளை அவர்கள் தலைமையில் ஓர் அநுதாபக்கூட்டம் கூடிற்று. அக்கூட்டத்தில் திரிசிராப்பள்ளி அன்பர். கி. ஆ. பெ. விஸ்வநாதம் அவர்களின் ஆருயிர்மனைவி ஸ்ரீமதி. இராஜாம்பாள் அவர்கள், சென்ற செவ்வாயன்று இரவு 11-30 விண்ணுலகெய்தியது பற்றி ஆற்றெணுத்து யருறுவதாகவும் அதுபற்றி திரு விஸ்வநாதம் அவர்கட்கும் அவர்கள் குடும்பத்தாருக்கும் தமது அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்வதாகவும் தீர்மானிக்கப்பட்டது என்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

தலைவர்: சென்ற நான்கு வருஷங்களாக இந்த அநுபவம் நமக்கு இல்லவே இல்லை.

ஸ்ரீமான் நியோகி: அஃதுண்மை. அரசாங்கக் கட்சியா ரிடமிருந்து இன்றுதான் நாங்கள் பாடங் கற்றுக்கொண்டோம்.

பண்டித நேரு: என் கட்சி அங்கத்தினர் பேசத் தொடங்கியபோது, அரசாங்கக் கட்சியார் கேட்கக் கூடாதென்று தீர்மானித்தனர். இப்பொழுது, நாங்களும், வரவு செலவு அங்கத்தினர் பேச்சைக் கேட்கக் கூடாதென்று தீர்மானித்திருக்கிறோம்.

தலைவர்: பெரும்பான்மையோர் உங்கள் பக்கம் இருக்கின்றனரா? உங்கள் கட்சியாரை சத்தம் செய்யும்படி சொல்லி விட்டீர்களே தவிர, உங்களுக்குப் பெரும்பான்மையோர் இல்லையே.

பண்டித நேரு: இதன் பலாபலன்களை ஏற்றுக்கொள்ளச் சித்தமாயிருக்கிறோம்.

கடைசியில், தலைவர், எதிர்க்கட்சியினருடைய ஆரவாரத்திற்கிடையே கூட்டத்தைக் கலைத்து விட்டார். பண்டித நேரு, தங்கட்சி அங்கத்தினரை நோக்கி, "நாம் இன்று வெற்றி பெற்றுவிட்டோம். நாளை மறுபடியும் இப்படிச் செய்யக்கூடாது" என்று கூறினர்.

### அங்கத்தினர் சச்சரவு

அங்கத்தினர், கூட்டத்தைவிட்டு வெளியே வந்துகொண் டிருக்கையில், காங்கிரஸ் கட்சி அங்கத்தினரான ஸ்ரீமான் எஸ். ஸி. மித்திரா, ஸ்ரீமான் அரங்கய்யரைப் பார்த்து என் காங்கிரஸ் கட்சி அங்கத்தினருடன் சேர்ந்து வாக்குக் கொடுக்கவில்லை யென்று கேட்டார். ஸ்ரீமான் அரங்கய்யர், இராணுவ சம்பந்தமாகத் தாம் கொண்டுவந்த பிரேரணைக்குச் சாதகமாகச் சுயராஜ்யக் கட்சியார் வாக்குக் கொடுக்கவில்லை யென்று கூறி, வேறு சில இழி மொழிகளையும் கூறினாரென்று சொல்லப் படுகிறது. இதைக் கேட்டு ஆத்திரமடைந்த ஸ்ரீமான் மித்ரா, ஸ்ரீமான் ஐயரைத் தடியால் அடிக்க, ஸ்ரீமான் ஐயர், ஸ்ரீமான் மித்ராவைத் திருப்பி அடித்தாராம். அருகே இருந்தவர்கள் இருவரையும் பிரித்துவிட்டு சமாதானம் செய்தார்கள்.

---

பாபு விபின சந்திரபாலர்:—அரசியல் காரணங்களுக்காக மதுவிலக்கு வேண்டுமென்று நாம் கூறவில்லை. நமது புராதன இலக்கியங்களையும், கோட்பாடுகளையும் காப்பாற்றிக் கொள்வதற்காகவே மதுவிலக்கு வேண்டுமென்று கூறுகிறோம்.

* * *

மகாத்மா காந்தி:—பிறருக்குச் சகாயம் புரிவதினாலும், பிறருடைய உதவியை எதிர்பார்ப்பதனாலும், மனிதன் அடக்கத்தைப் பெறுகிறான்.

* * *

மேற்படியார்:—இந்தியாவின் ஞான வாழ்வுக்கு ஹிந்து மதம் செய்திருக்கும் உதவியானது, அஹிம்சா தத்துவம் ஒன்றேயாகும். இந்தியாவின் பல்கோடி ஜனங்களின் மனதில், இந்தத் தத்துவம் சென்ற மூவாயிர வருஷங்களாக வேரூன்றியிருக்கிறது. இந்தத் தத்துவம் வளர்ந்துகொண்டே வருகிறது.

* * *

மேற்படியார்: கடவுளின் ஏகத்தன்மையை நிரூபணம் செய்து, மனிதர் அனைவரும் சகோதரர் என்பதை அநுபவாழ்க்கையில் கொண்டு வந்தவிஷயத்தில் இஸ்லாம் மதம் பெரிய உதவியைச்செய்கிறது.

* * *

மேற்படியார்: ஆண்டவன், தன் அடியார் மூலம் சில சமயங்களில் பேசுகிறான் என்பதுண்மையே. ஆனால் அவர்கள் வாய்மொழி மூலமாகப் பேசுவதில்லை; அவர்கள் நடந்து காட்டும் பரிசுத்தவாழ்க்கையின் மூலமாகவே பேசுகிறான்.

* * *

மேற்படியார்: நமது நாட்டு இளைஞர்களுக்கு இப்பொழுது வேண்டப்படுவது நம்பிக்கை. பேரறிவுடையேம் என்னும் அகங்காரத்தை ஒழித்து, ஆண்டவனுக்கு நம்மை ஒப்புக்கொடுத்தாலன்றி, இந்த நம்பிக்கை உண்டாகாது.

* * *

ஸர். பி. சிட்னி:—ஒரு மனிதனுடைய வாழ்க்கை நாட்களில் மிகச் சந்தோஷமான நாள், பிறர்க்குதவி செய்யும் நாளேயாகும்.

* * *

ரவீந்திரநாத் டாக்கூர்:—நன்மைசெய்வதிலேயே ஈடுபட்டிருப்பவன், நல்லவனாயிருக்கப் போதிய அவகாசம் பெறுவதில்லை.

* * *

லே ஹெண்ட்:— பொறுமையும், சாந்தமுமே ஒருவனுக்குச் சக்தியைக்கொடுப்பன.

* * *

ஜார்ஜ் பாரோஸ்:—குறித்த ஒரு வஸ்துவின் மீதே மனிதன் தன் மனோசக்தி முழுவதையும் செலுத்தும் பட்சத்தில் அதை அவன் கட்டாயம் அடைவான்.

## கலம்பகம்

24–3–29-ல் பம்பாய் சூரிப் பருத்திக் கிடங்கில் தீப்பற்றிக்கொண்டு எரிந்ததால், 12 லட்சம் ரூபாவுக்கு நஷ்டமேற்பட்டிருக்கிறது.

o o o

பிரெஞ்சு படைத்தலைவரும், ஐரோப்பிய மகாயுத்தத்தில் புகழ் பெற்ற வருமான மார்ஷல் போக் என்பார் 20-3-29-ல் தம் 78ம் வயதில் மரண மடைந்தார்.

o o o

கும்பகோணம் ஸ்ரீ சாரங்கபாணி கோயிலிலுள்ள ஒரு விக்கிரகத்தின் கழுத்திலணியப்பட்டிருந்த 12 சவரன் பெறுமான பொன் ஆபரணம் ஒன்று களவுபோய்விட்டது.

o o o

குச்சனூரில் லாலா லஜபதிராய் அவர்களின் ஞாபகார்த்தமாக 16-3-29-ந்தேதி மாலை 5-மணிக்கு வாசகசாலை ஒன்று திறக்கப்பட்டது என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

நாகபுரி மாகாண காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீமான் எம். பி. அபயங்கார் கல்கத்தா காங்கிரஸ் தீர்மானத்திற்கிணங்க தம் வருமானத்தில் ஒரு பகுதியான ரூ 600 காங்கிரஸ் நிதிக்குக் கொடுத்துள்ளார்.

o o o

கல்கத்தாவில் ஹோளிப்பண்டிகை யன்று (25 3-29) கலகஞ்செய்ததாகவும், தெருக்களில் அந்நியநாட்டுத் துணிகளைக் கொளுத்தியதாகவும் குற்றஞ்சாட்டப்பட்டு 200 பேர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

o o o

சென்னை, தம்புச்செட்டித் தெருவில் வசிக்கும் பாலு செட்டி என்னுஞ் சிறவர் 20-3-29-ல் மயிலாப்பூர் திருக்குளத்தில், குளித்துக்கொண்டிருக்கும்போது ஆழத்திற்குச் சென்றதால் மூழ்கி மரணமடைந்தார்.

o o o

24-3-29-ல் சென்னை சட்டசபையில் கைதிகளுக்குக் கதர் துணியே கொடுக்க வேண்டுமென்று ஸ்ரீமான் சத்தியமூர்த்தியால் கொண்டு வரப்பட்ட தீர்மானம் பெரும்பான்மையான வாக்குகளால் நிறைவேறியது.

o o o

பாலையம்பட்டியைச் சேர்ந்த கோபாலபுரம் என்னும் கிராமத்தில் ரெட்டியார் வகுப்பு மாது ஒருவருக்கு 21-3-29ல் நான்கு ஆண் குழந்தைகள் பிறந்தன. பிறந்த கொஞ்ச நேரத்திற்குள் அவைகள் மரணமடைந்தன.

o o o

மகாத்மா காந்தி அடுத்த மாதத்தில் பெஜவாடாவுக்கு விஜயஞ் செய்யும்போது, ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்த பெஜவாடா தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தார் அவருக்குப் பண முடிப்பொன்று அளிக்கத் தீர்மானித்திருக்கின்றனர்.

o o o

25-3-29-ல் திருநெல்வேலியைச் சேர்ந்த காயத்தாரில் ஒரு பசு 2 தலைகளுடனும் 6 கால்களுடனும் கூடிய கன்று ஒன்றை ஈன்றதாகவும், அக் கன்று பிறந்த சில நிமிஷங்கள் வரை உயிருடனிருந்து பின்னர் இறந்து விட்டதாகவும் 'பிரிபிரஸ்' செய்தி கூறுகிறது.

o o o

20-3-29ல் கான்பூர் டிஸ்டிரிக்ட் மாஜிஸ்டிரேட், இராஜத் துவேஷமான இரண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்தியதாகக் குற்றஞ் சாட்டப்பட்ட தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்த பண்டித சர்ஜு பிரசாத் மித்ராவுக்கு 15 மாதக் கடுங்காவலும் 200 ரூபா அபராதமும் விதித்தார்.

o o o

ஜார்ஜ் மன்னர் மிகவும் குணமடைந்துவிட்டார். சிலநாட்களாக அரசர் தினந்தோறும் தோட்டத்தில் சிறிது நேரம் உலாவிக்கொண்டு வருகிறார். அரசர் குணமடைந்த பிறகு எடுக்கப்பட்ட கார்டு அளவுள்ள புகைப் படங்கள் இதுவரை 150,000 விற்கப்பட்டிருக்கின்றன.

o o o

பாலையம்பட்டியைச்சேர்ந்த கோபாலபுரம் என்னும் கிராமத்தில் ரெட்டியார் வகுப்பு மாது ஒருவருக்கு 21-3-29-ல் நான்கு ஆண் குழந்தைகள் பிறந்தனவென்றும் பிறந்த கொஞ்சநேரத்திற்குள் அவைகள் மரணமடைந்தனவென்றும் ஒரு பத்திரிகை நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

ஆந்திரதேசத்தலைவர் ஸ்ரீமான். புலுசு சாம்ப மூர்த்தி 20-3-29ல் நடுநிசியில் ராஜமஹேந்திர சிறையினின்றும் பெல்லாரி சிறைக்கு மாற்றப்பட்டார். அப்போது அவர் தம்மூட்டைகளுடன் 2மைல் தூரத்திலுள்ள கோதாவரி ஸ்டேஷனுக்கு நடத்தி அழைத்து வரப்பட்டார்.

o o o

மதுரை, வியாஸராயபுரம், அக்கிரஹாரத்திலுள்ள காங்கிரஸ் தொண்டர் ஸ்ரீமான் ரா. ஸ்ரீநிவாச வரதய்யங்கார் வீட்டில் 24-3-29-ந் தேதி யன்று இரவில் யாரோ விரோதிகள் தீ வைத்து விட்டனர். கொஞ்சம் எரிந்த பிறகு தீ அணைக்கப்பட்டது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

o o o

மைசூரில் பிரதம நீதி பதியாயிருந்த திவான்பகதூர் சந்திரசேகர ஐயர் காலஞ்சென்ற தம்மனைவியார் பார்வதியம்மாள் ஞாபகார்த்தமாக பெங்களூரிலுள்ள ஒரு பெண் பள்ளிக்கூடத்துக்கு ரூ 25,000 நன்கொடையளித்துள்ளார். இப்பள்ளிக்கூடம் அவ்வம்மையரால் ஸ்தாபிக்கப்பட்டது.

o o o

20-3-29ல் இந்திய சட்டசபை கலைந்து சபை மண்டபத்தைவிட்டு அங்கத்தினர் வெளியே போய்க் கொண்டிருக்கும்போது, வாயிலில் நின்று கொண்டிருந்த ஸ்ரீமான் எஸ். ஸி. மித்ரா (சுயராஜ்யக் கட்சி) வுக்கும் ஸ்ரீமான் அரங்கய்யருக்கும் சச்சரவு உண்டாகி ஒருவருக்கொருவர் தடியாலடித்துக் கொண்டார்கள்.

o o o

திருப்பதி மகந்துவிற்குச் சில மாதகாலமாக உடம்பு அசௌக்கியமாயிருப்பதால், தேவஸ்தானத்தை நிருவகிக்க அவருடைய சீடர்களில் ஒருவர் நியமிக்க ஏற்பாடு செய்ததைக் குறித்துச் சிறிது குழப்பம் ஏற்பட்டுள்ளதென்று தெரிய வருகிறது. தற்போது மகந்து சென்னையில் வைத்திய சிகிச்சை பெற்று வருகிறார்.

o o o

திருக்கி அரசாங்கத்தார், பிரம்மசாரி, கன்னிகை, குழந்தையில்லாத விதவைகள், தாரமிழந்தவன் இவர்களுக்கு வரி விதிக்கச் சட்டஞ் செய்யப் போவதாக அறிவித்திருக்கிறார். அங்ஙனம் வசூலிக்கப்படும் வரியின் ஒரு பகுதியை ஐந்து குழந்தைகளும் அதற்கு மேற்பட்ட குழந்தைகளையு முடைய பெற்றோர்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்படும்.

o o o

மௌலானா மகமதலி இரங்கூனில் விஜயஞ் செய்திருந்த காலை அங்கு வரவேற்பும், விருந்துகளும் நடைபெற்றன. அவர் டில்லியில் கூடப்போகும் அகில இந்திய முஸ்லீம் லீக் கூட்டத்திற்குச் செல்ல இரங்கூனினின்றும் 23-3-29-ல் கல்கத்தாவுக்குப் புறப்பட்டு விட்டார். இந்தியாவில் சில காரியங்கள் முடிந்த பிறகு அவர் மீண்டும் இரங்கூன் செல்லுவார்.

o o o

இராஜப்பிரதிநிதியும், கவர்னர் ஜெனரலுமான லார்ட் இர்வின் 4 மாதம் ஓய்வு எடுத்துக்கொண்டு ஜூன் மாதம் இங்கிலாந்துக்குச் செல்வதால், அதுவரை சென்னை கவர்னர் லார்டு கோஷன இராஜப்பிரதிநிதியாகவும், கவர்னர் ஜெனரலாகவும் நியமிக்கப்பட்டிருக்கிறார். எனவே, தற்காலிகமாக சர் நார்மன் மார்ஸ் பாக்ஸ் சென்னைக் கவர்னராக நியமிக்கப்பட்டுள்ளார்.

o o o

வேலூரில் 144-வது உத்திரவை மீறி தற்சாக சுவாமி ஷண்முகானந்தர்மீது நடைபெற்றுவரும் வழக்கில் ஆம்பூர் சப் மாஜிஸ்டிரேட் அவருக்கு 6 மாதக் கடுங்காவல் தண்டனை விதித்தார். சென்ற பிப்ரவரி 20-ந் தேதியன்று கோர்ட்டில் அஜாராகாததற்காக அவர்மீது மற்றொரு வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது. அவ்வழக்கு வேலூர் சப் மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் 5-4-29-ல் விசாரிக்கப்படும்.

o o o

சென்னையைச்சார்ந்த திருவான்மியூர் திருவிழாவன்று (25-3-29) கோயில் குளத்தில் மூர்மார்க்கட் அப்பாசாமி செட்டியாரின் புதல்வன் பச்சையப்பன் மூழ்கி மரணமடைந்தான். பச்சையப்பன், குளத்தில் குளித்துக் கொண்டிருக்கும்போது சில சிறுவர்கள் வேடிக்கையாக எறிந்த கற்களில் ஒன்று அவன் மூக்கில்பட்டு இரத்தம் பெருகியதால், மூர்ச்சையற்றுத் தண்ணீரில் மூழ்கி விட்டதாகக் கூறப்படுகிறது. இது சம்பந்தமாக 4 சிறுவர் கைது செய்யப்பட்டனர்.

o o o

சென்னைக் குலால இளைஞர் சங்கம்:— இச்சங்க ஆதரவில் நாளை வெள்ளிக்கிழமை (29-3-29) மாலை 6 மணிக்கு சென்னை மீர்சாயபு பேட்டைக் கடுத்த திரு நீலகண்டபுரத்து (குயப்பேட்டை) மாவடி விநாயகர் கோயிலில் திருவாளர் தி.பொ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் எம். ஏ., பி. எல். "உய்யுநெறி" என்பது பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்துவார்கள்.

o o o

இளந் தம்பதிகளின் தற்கொலை:— 20-3-29-ல் சென்னை, மயிலாப்பூர் 'லாஜர்னல்' அச்சுக்கூடத்தில் அச்சுக்கோக்கும் வேலையிலிருந்த பலராமநாயக்கர் என்னும் 25 வயதுடைய இளைஞரும் 19 வயதுடைய சரஸ்வதி என்னும் அவர் மனைவியாரும், மந்தவெளி கிணற்றொன்றில் பிணமாக மிதந்துகொண்டிருந்தனர். இருவரும் ஒன்றாகச் சேர்ந்து கிணற்றில் குதித்ததாகத் தெரிய வருகிறது. அவர்கள் அணிந்திருந்த துணியில் "நாங்களே விரும்பி இக்காரியத்தைச் செய்தோமாதலால், மற்றவர்கள் இப்பழிக்கு ஆளாகமாட்டார்கள்" என்று எழுதப்பட்ட ஒரு காகிதம் இணைக்கப்பட்டிருந்தது. பின்னர் போலீஸார் பிணங்களைக் கிணற்றினின்றும் அப்புறப்படுத்தினர்.











## சன்மார்க்கம்

"கிறிஸ்து வேண்டும், சர்ச்மதம் (மாதா கோவில்) வேண்டாம்" என்று உலகம் போற்றும் ஸ்வாமி விவேகானந்தர் ஒரு சமயம் சொன்னார். ஏனென்றால் கிறஸ்து நாதர் போதித்த தர்மங்கள் ஒன்றாக இருக்க அவர் சமயத்தைச் சேர்ந்தவர்களாகிய கிறிஸ்தவர்களின் வழிகள் வேறாக இருக்கின்றனவென்பது வெளிப்படை. இவ்வுண்மை ஒவ்வொரு மதத்திற்கும் பொருந்தும். ஆனால் பிற மதங்களிலிருப்பதைப் பார்க்கிலும் இந்து மதத்தில் அதிகமாகக் குறைபாடுகளிலிருப்பதாக இந்துக்கள் சொல்வதுண்டு. அதே மாதிரி மற்ற மதங்களைச் சேர்ந்தவர்களும் தத்தம் மதத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருப்பதையும் நாம் கேட்கிறோம். அத்தகைய குறைபாடுகளைக் கண்ட மதாசாரியர்களோ, பக்தர்களோ, சீர்திருத்தக்காரர்களோ சமயத்தை அடியோடு அழித்து விடவேண்டுமென்று முயற்சி செய்தார்களில்லை. ஆனால் அக்குறைபாடுகளைப்போக்கிக் காலத்திற்கு ஏற்றவாறு திருத்தங்கள் செய்திருக்கின்றனர். அதன் உண்மையை மதசரித்திரங்கள் சொல்லும்.

இக்காலத்தில் உலக வாழ்க்கையில் ஒவ்வொன்றிற்கும் குறுக்கு வழிகள் கண்டுபிடிக்கப்படுகின்றன. அப்புதிய வழிகளே நவீன நாகரிகங்கள் என்னப்படும். இவைகளிடத்தும் மதிப்பும் பழமையான வழிகளில் வெறுப்பும் அதிகப்பட்டு வருகின்றன. இது தவறு. இம்மாதிரியே நம் புத்தியைச் செலுத்தி வந்தால் உலகம் நடைபெறுவதே கஷ்டமாக நேரும். இம்மாதிரி நோக்கம் உலக வாழ்க்கையிலிருந்து இப்போது நமது சமயத்திற்குள்ளும் வந்து புகுந்து விட்டது. இந்து சமயம் ஒரு சமுத்திரம். அதில் பல முறைகளிருப்பதைக் காண்கிறோம். சாஸ்திரங்களும் பலவாக இருக்கின்றன. அவையெல்லாம் மக்களுக்குள் நேயத்தையும் ஒற்றுமையையும் வளர்ப்பதற்கும் ஆன்மவிருத்தியடைவதற்கும் துணைக்கருவிகளாக ஏற்படுத்தப்பட்டன. அப்படியிருந்தும் அவைகளுக்கு நேர் எதிரிடையான தன்மைகளே நமக்குள் பெரும்பாலும் காண்பதன்காரணம் யாது? உயர்வு தாழ்வு என்னு முணர்ச்சி ஜாதி வித்தியாசங்கள் தீண்டாமை, உரிமை மாறுபாடுகள் முதலியவைகளை அடிப்படையாகக்கொண்ட பல வழக்கங்கள் மலிந்து கிடக்கின்றன. இந்துவாகச் சொல்லிக்கொள்ளும் பெரும்பாலோர் மேற்படி பழக்க வழக்கங்களுக்கு அடிமைப்பட்டவர்களாகக் காணப்படுகிறார்கள். நாகரிக முதிர்ந்த நமது சமயத்தின் கொள்கைகள் தர்மங்கள் எங்கே? நமது வாழ்க்கையின் வழிகள் எங்கே?

நாம் கட்டுக் கட்டாய்ப் படிக்கிறோம், பேசுகிறோம். (1) "எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும்." (2) "எவ்வுயிருக்கும் அன்பாயிரு." (3) "எவரை வருத்திடினும் அவனை வருத்துவதாகும்" என்னும் பெரியோர் வாக்கியங்களுக்கு ஒத்த வாழ்க்கை நமக்குள் எவ்வளவு தூரம் பொருந்தி இருக்கிறது? பரிதாபம்! பரிதாபம்!! நாம் ஆண்டவன் அன்புக்கும் அருளுக்கும் எவ்வாறு அருகர்களாக முடியும்?

சமயத்தின் தத்துவங்களை விட்டு அதன் வெளிக் காரியங்களில் சிரத்தை மிகுதியாகக் காட்டுகிறோம். இதனோடு பொருளற்ற சமூக ஆசார கோட்பாடுகளுக்கு இரையாகி நிற்கின்றோம். இப்படி இருக்கும் நாம், பக்தியிலும் ஞானத்திலும் சிறந்தவர்களென்று இறுமாப் படைந்திருக்கிறோம்!

இறைவன் வழிதவறி நிற்கும் நமக்கு அவனால் எச்சரிக்கைகள் அனுப்பப் படுகின்றன. அவைகளில் ஒன்றே இப்போது உலகில் காணும் பல்வேறு குழப்பங்களாம். அவைகளை கவனிப்போம்; சிந்திப்போம். அப்பிணிக்குத் தக்க மருந்தைத் தேடுவோம். அப்படிக் காலத்திற் கேற்ற பரிகாரங்களைச் செய்யாமல் பின் வாங்குவோமானால் நமக்கு நாமே துரோகிகளாவோம். கடவுளுக்கும், சமயத்திற்கும், சாஸ்திரங்களுக்கும், அவைகளின் தர்மங்களுக்கும், சமய அடியார்களுக்கும் நன்றி கெட்டவர்களாவோம்.

ஆகவே, நாம் விழிப்போம்! விழிப்போம்! சமயத்தின் உண்மைகளை உள்ளபடி உணர்வோம்; சமரச சன்மார்க்கத்தைக் கடைப்பிடிப்போம்; ஜாதி வேற்றுமையை ஒழிப்போம்; சமயப்போரை நீக்குவோம்; ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமையை நாட்டுவோம்; ஆண்டவன் அன்பையும் அருளையும் அடைவோம்; இன்றும் என்றும் இன்புற்றிருப்போம் எல்லோரும்.

அசத்தைத் தள்ளிச் சத்தைக் கொள்வது சுலபமல்ல. தீவிரம் வேண்டும்; பிடிவாதம் வேண்டும்; உறுதி வேண்டும்.

இவ்வெண்ணங் கொண்டு எல்லாச் சமயத்தாரும் எவ்வித வேற்றுமையு மின்றி இறைவனைத் தினம் துதி செய்வார்களாக.

காரியதரிசி,
பொதுஜன ஊழிய சங்கம்,
ஆதம்பாக்கம், பறங்கிமலை.

## இந்தியாவும் காந்தியடிகளும்

### ஓர் அறிஞரின் அநுபவங்கள்

[ஐரோப்பிய மகா யுத்தத்திற்குப் பிறகு, உலகத்தின் பல நாடுகளில் ஒரு புத்துணர்ச்சி தோன்றியது. இந்த உணர்ச்சியின் தன்மையை அறிந்து கொள்ள வேண்டி, ஸ்ரீமான் அப்டன் க்ளோஸ் என்ற ஓர் அறிஞர் 1927-28-ம் வருஷத்தில் பல நாடுகளுக்குச் சுற்றுப் பிரயாணம் செய்தார். இதன் பயனாக "ஆசியாவின் எழுச்சி" என்னும் நூல் இவரால் எழுதப்பட்டுச் சமீபத்தில் வெளியாயிருக்கிறது. இந்நூலிற் கூறப்பட்டுள்ள அபிப்பிராயங்கள் அனைத்தையும் இந்தியர்கள் அங்கீகரிக்க மாட்டார்களெனினும், இதில் சுவையுள்ள பல விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. மகாத்மாகாந்தியைப் பற்றியும் இந்திய தேசிய இயக்கத்தைப் பற்றியும் சுதேச மன்னர்களின் அலங்கார சபையைப் பற்றியும் இந்நூலாசிரியர் வரைந்துள்ள சில பகுதிகளை மட்டும் ஈண்டு மொழி பெயர்த்துத் தருகிறோம்.]

பர்மாவிலிருந்து நாங்கள் கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்தோம். தேர்தல் நடைபெற்றுக் கொண்டிருந்தது. இந்தத் தேர்தல், சிகாகோ நகரின் ஆரவாரத்தை எங்களுக்கு நினைவூட்டியது. சுவற்று விளம்பரங்கள், கூட்டங்கள், ஊர்வலங்கள் முதலியவை, ஒரு பிரதிநிதியைத் தாக்கியும் மற்றொரு பிரதிநிதியைத் தாக்கியும் பேசுவதில் முனைந்து நின்றன. இரண்டொரு கலகங்களினின்றும் நாங்கள் தப்பித்துக் கொண்டோம். பிரிட்டிஷ் போலீசாரும் சுதேசிப் போலீசாரும் இத்தகைய கலகங்களை சீக்கிரத்தில், ஆனால் முரட்டுத்தனமாக அடக்கி விடுகிறார்கள். பத்திரிகை விற்கும் சிறு பிள்ளைகள், எதிர்க்கட்சி அபேட்சகர்களைக் கண்டித்து எழுதப்பட்டுள்ள கட்டுரைகளையுடைய பத்திரிகைகளின் பெயரைச் சொல்லிக் கூச்சலிட்டுக் கொண்டிருக்கின்றார்கள். உயர்ந்த ஜாதிப் பெண்மக்கள் தங்களுடைய பிள்ளைகளுக்காக வாக்குக் கொடுக்கும் பொருட்டு மோட்டார் வண்டிகளில் செல்லுகிறார்கள். பரஸ்பர ஒத்துழைப்பாளர் மறக்க முடியாத சில நிபந்தனைகளை ஒப்புக்கொண்டு அதிகாரத்திற்கு வர முயல்கிறார்கள். ஆனால் சி.ர. தாஸ் அவர்களைத் தலைவராகக்கொண்ட கட்சியாரே அதிக கவனம் பெறுகின்றனர் என்று தெரிகிறது. பரஸ்பர ஒத்துழைப்பாளர் ஒத்துழையாதார் என்ற இந்த இரண்டு கட்சிகளுக்கு மிடையே, பலவிதக் கொள்கைகளையுடைய சுமார் அரை டஜன் கட்சிகள் இருக்கின்றன. இவை தவிர, பொது உடைமைக் கட்சி, இப்பொழுதுள்ளன வெல்லாம் போக வேண்டுமென்ற கட்சி முதலிய பல இருக்கின்றன. வங்காளம், இந்தியாவின் அரசியலிடம் என்று கூறலாம். பிரிட்டிஷார், சம்பந்த மற்றவர்போல், உயர்வுடையோர் போல், அதிலும் கல்கத்தாவில் இவர்கள் பிராமணர்களைவிட அதிகமாக ஜாதி நம்பிக்கையுடையவர்கள் போல் ஒதுங்கி யிருக்கின்றனர். ஆனால் இவர்கள் எல்லாவற்றையும் கவலையுடன் கவனித்துக் கொண்டிருக்கின்றனர். எங்களை உபசரித்த ஒரு ஸ்காட்லாந்து தேசத்திற் பிறந்த ஒருவர், எங்களோடு விருந்துண்டு கொண்டிருக்கும்போது, "இந்த வங்காளிகள் அடங்க முடியாத பேய்கள்" என்று கூறிப் பின்னும், "நாம் அவர்களுடைய நிலைமையிலிருந்தால், அவர்களைவிட இரண்டு மடங்கு கொடியவர்களாயிருப்போம்" என்று சிறிதும் கூசாமல் கூறினார். பிறகு, நாங்கள் கல்கத்தாவினின்று அலகாபாத்துக்குச் சென்றோம். ஏறக்குறைய இந்தியாவிலுள்ள எல்லா அரசியல் கட்சிகளின் தலைமை ஸ்தானமும் இதுவேயாம். இங்கே, இந்திய தேசிய மகாசபை கூடுகிறது. எல்லாக் கட்சிப் பிரதிநிதிகளும் இம்மகா சபைக்கு வருகிறார்கள்.

* * *

நாங்கள் டில்லிக்கு வந்தோம். இங்கே, அரசியல் இலாகா காரியதரிசியினுடைய அழைப்பின்பேரில், சுதேச மன்னர் சபைக் கூட்டத்திற்குச் சென்றோம். இச்சபையில், புராதன ஆடம்பரங்கள் நிரம்பி யிருக்கின்றன. இராஜப் பிரதிநிதியாகிய லார்ட் இர்வினுடைய தலைமையின் கீழ் இச்சபையின் அங்கத்தினர்களாகிய மகா ராஜாக்கள் பொன்னுடைகளாலும் பல ஆபரணங்களாலும் தங்களை அலங்கரித்துக் கொண்டு வந்து ஒருவரை யொருவர், உண்மையற்ற விதமாகப் புகழ்ந்து கொள்கின்றனர். இவர்கள் நன்றாக அலங்கரிக்கப்பட்ட ரோல்ஸ் ராய்ஸ்

## சமயப் போர்

———[*.*]———

[திருவாளர் கே. எஸ். நவநீத கிருஷ்ண பாரதியார் பாடியது]

1. வாழ்வதற்கே யெனச்சான்ேறார் வகுத்தபெருஞ் சமயங்கள்
ஊழ்வயத்தாற் பாரதத்தி லொருகூற்று வருமாறிப்
பாழ்படுத்த வந்தவென்னிற் பற்றினிமற்றி யாதுளதால்
தாழ்வதற்கே நோன்புகொளல் தகைமையிலா இழிநெறியே.

2. வீட்டினிலுஞ் சமயப்போர் வீதியிலுஞ் சமயப்போர்
நாட்டினிலுஞ் சமயப்போர் நகரத்துஞ் சமயப்போர்
பாட்டினிலுஞ் சமயப்போர் பாரதமா நாட்டிலந்தோ
கூட்டினிலுஞ் சமயப்போர் குடிகெடுக்கும் பெரும்போரே.

3. தேவுலக வாட்சிபெறத் தெய்வமருள் சமயங்கள்
பூவுலக வாட்சிதரப் பொலிவுற்று ஓங்குகவே
பாவமிலாச் சமயத்தின் பற்றாலே பாரதத்தார்
தீவினைகள் செய்யாது திருவடைந்த திறனென்னே.

4. நோயாளர் தமக்குநல்லூண் நோவுறுத்து நஞ்சாம்போல்
தாயாகும் பாரதத்தார் தமக்குயர்ந்த சமயவின்பம்
பேயோடி யறமாறிப் புலைத்துன்பா யுருக்கொளுமேல்
பேயாவோம் பித்தாவோம் பெரும்பழிக்கா ளாவோமே.

5. மண்ணாள்வார் பலதுறையால் வையத்தைப் பிணித்தளவுற்று
எண்ணுநின் ருளுமுறை யின்றெனினன் றதுதருமோ ?
கண்ணான சமயத்தைக் காக்கவுளங் கொளல்வேண்டும்
பண்ணாரும் ஆட்சிசிறை படிந்தொளிரும் பாரதத்தே.

மோட்டார் வண்டிகளில் ஏறிச் செல்லும் போது,—இவர்களில் ஒருவருக்கு முழுவதும் வெள்ளியினாலேயே அமைக்கப்பட்ட மோட்டார் வண்டி இருக்கிறது—இவர்களுடைய பிரஜைகளைப் பற்றிய எண்ணம் எங்கள் மனத்தில் எழுந்தது. சுதேச சமஸ்தானங்களிலுள்ள பிரஜைகளைப் போல் பரிதாபப்படக் கூடியவர்கள் எவரும் இல்லை யென்று கூறலாம். சாரமற்ற இம்மன்னர்சபைக் கூட்டத்தினால் இராஜப் பிரதிநிதியின் அரிய காலம் வீணாகிறதென்றே எங்களுக்குப் புலப்பட்டது. "பிரிட்டிஷார் இந்தியாவை விட்டுப்போன பத்து நிமிஷங்களுக்கெல்லாம் இந்த ஆடம்பர பொம்மைகள் இல்லாமற்போகும்" என்று காந்திகூறியதாகப் பின்னர் கேள்விப்பட்டோம். இதைக் கேட்டதும், மேலே கூறிய எங்களுடைய அபிப்பிராயம் உறுதிப்பட்டது. சுதேச மன்னர்களடங்கிய இந்தச் சபையில்கூட, ஆசியாவின் சுதந்திர உணர்ச்சியை நாங்கள் கண்டோம். எவருடைய வரவு மிக முக்கியமானதென்று கருதப்படுகிறதோ, எவர் பெரிய அரசர்கள் இலக்கத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறார்களோ அவர்கள்கூட தங்களுக்குக் கிடைத்த அழைப்பைப் புறக்கணித்து, மேற்படி கூட்டத்திற்கு வராமலே இருக்கிறார்கள்.

* * *

பிறகு, இரண்டு நாட்கள் கழித்து, (சபர்மதி) ஆசிரமத்துக்குச் சென்றோம். இந்த ஆசிரமத்துக்குடையவர் பாதி நிர்வாணமாயிருக்கிறார்; பார்வைக்கு மிகச் சிறியவர்; மேலே கூறப்பட்ட மன்னர் சபை நடவடிக்கைகள் எல்லாவற்றிற்கும் சேர்த்து என்ன மதிப்பு இருக்குமோ அதைவிட அதிகமான மதிப்பு, இந்தச் சிறிய மனிதருடைய ஒரு வார்த்தைக்கு இருக்கிறது. நாங்கள் ஆமதாபாத் ஸ்டேஷனிலிருந்து, சபர்மதிக்கு ஒருமாட்டு வண்டியில் மெதுவாகச் சென்றோம். எங்களைப் போலவே பல வகுப்பார், பல பிரிவினர், மேற்படி ஆசிரமத்துக்குச் சென்று கொண்டிருந்தனர். மேனாட்டு நாகரிகத்தை ஒழிப்பதே இந்த ஆசிரமத்தாருடைய நோக்கம் என்று பொதுவாகக் கூறலாம். காலையில் எழுந்ததும், இந்த மகாத்மா பிரார்த்தனை செய்கிறார். தமது கைராட்டினத்தில் நூல் நூற்றுக் கொண்டேதான் இவர் வந்தவர்களுடன் சம்பாஷிக்கிறார். குடியானவர் பலர், வரிசை வரிசையாக வந்து இவரை தரிசனம் செய்துவிட்டுப் போகிறார்கள். முக்கியமான சிலர் மட்டும் அங்கேயே உட்கார்ந்து சம்பாஷிக்கிறார்கள். இங்கிலாந்தில், மிகுந்த ஆதரவுடன் பிரசுரிக்கப்படும் பல நூல்களை எழுதிய ஒரு பிரபல சரித்திராசிரியர், (இவரை முதலில் நாங்கள் ஓர் ஏழைக்கூலி என்று நினைத்தோம்) ஒரு முஸ்லீம் வித்துவான் முதலிய பலர், நாங்களும் வெட்கிப்போகும் படியான சுத்தமான இங்கிலீஷில் சம்பாஷணை செய்து கொண்டிருந்தனர்.

* * *

இராட்டினத்தில் செலுத்தி யிருந்த தமது கவனத்தை நிறுத்தி, தமது கூரிய கண்களால் எங்களைப் பார்த்துக் கொண்டே தலைவர் காந்தி-பின்வருமாறு கூறலானார்:— "இரண்டு வருஷம் சிறை வாசமும், மூன்று வருஷம் ஓய்வும் ஆனபிறகு மறுபடியும் நான் தொண்டு செய்வதற்கு முன்னணியில் வந்துவிட்டேன். பொதுஜனச் சட்டமறுப்பு என்னும் ஆயுதத்தை உபயோகிக்கக்கூடிய வழியில் என்னுடைய ஜனங்களை நான் அழைத்துச் சொல்லப் போகிறேன்." அப்படி யென்றால் என்னவென்று நாங்கள் கேட்டோம். "எங்களை ஆள்வோர் இயற்றும் ஒவ்வொரு சட்டத்தையும் - மானிட தருமத்திற்கு விரோதமில்லாத சட்டங்களைத் தவிர்த்து - உண்ணாவிரதத்தினாலும் பிரார்த்தனையினாலும் பத்தாயிரம் கணக்காக முன் வந்து ஜனங்கள் உடைத்தெறிவார்கள்" என்று காந்தி பதில் கூறினர். "அது வெற்றியடையுமா" வென்று நாங்கள் கேட்டோம். "அது தோல்வி யடைந்து விட்டதாக எந்த சரித்திரமும் கூறவில்லையே" யென்று அவர் அமைதியாக ஆரம்பித்துப் பின்னுங் கூறுவார்:— "மேனாட்டிலுள்ள நீங்கள், மிருக பலமே வெற்றி கொடுக்கும் என்று நினைக்கிறீர்கள். உண்மையில் சாத்வீக எதிர்ப்பே வெற்றி பெற்றிருக்கிறது." இதற்கு ஏதேனும் உதாரணம் காட்ட முடியுமா வென்று நாங்கள் கேட்டோம். "ரோம ஏகாதிபத்தியத்தை கிறிஸ்தவ மதாசாரியர்கள் வென்றுவிட வில்லையா? சாத்வீக எதிர்ப்பை எவரும் அசைக்க முடியாது. நமது எதிர்ப்பு, பலாத்காரத்தில் இறங்காதவரை, நாம் தோல்வியடைய மாட்டோம் என்பது நிச்சயம். எல்லாச் சமூகத்தாரும், எல்லா மதத்தினரும் அடங்கிய கட்சி யொன்றே நமக்கு வேண்டும். ஏறக்குறைய அத்தகைய கட்சி யொன்றே ஏற்பாடாகிக் கொண்டு வருகிறது. இதனால் எங்களுடைய திட்டங்க ளெல்லாம் வெறும் ஆகாயக் கோட்டைகள் என்போருடைய கூற்று பொய்ப்படும். இதோ பாருங்கள்! இங்கே ஒருமுஸ்லீம் வித்துவான் உட்கார்ந்திருக்கிறார். நாங்கள் பரஸ்பரம் ஒருவர்க்கொருவர் நம்புகிறோம். இந்தியாவில் சாதிக்கட்டுப்பாடு முறிந்துகொண்டு வருகிறதென்பதை நீங்கள் உங்களுடைய சுற்றுப்பிரயாணத்தில் அறிந்து கொண்டிருப்பீர்கள். இந்தியர்களாகிய நாங்கள் ஒற்றுமையா யிருக்கிறோம் என்று காண்பித்தால் பிரிட்டிஷார் உடனே வெளியேறி விடுவர்; எதிர்க்க மாட்டார். அவர்கள் புத்திசாலிகளல்லவா? 'இந்தியர்கள் ஒற்றுமைப்பட்டு எச்சிலுமிழ்ந்தால், அதனால் உண்டாகும் தேக்கத்தில் மூன்று லட்சம் இங்கிலீஷ்காரர்கள் அமிழ்ந்து விடுவார்கள்' என்று ஒருவர் கூறியது எனக்கு இப்பொழுது ஞாபகம் வருகிறது" என்று கூறி முடித்தார்.

Printed and Published by T. V. Kalyanasundaran (Editor) at the Sadhu Press, 12-Ganapathi Mudaly St., Royapettah, Madras.

